REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



பகுத்தறிவு

பகுத்தறிவுஎன்னும் மருந்தால் வைதீகம் என்னும் நோயைப் போக்க முடியும்.

பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்



கலப்பு மணம்

வெறும் காமஇச்சையின் காரணமாக நடைபெறும் கலப்பு மணங்களை நான் ஆதரிக்கமாட்டேன்.

அண்ணல் காந்தி

மலர்: 3 (●) சென்னை 27—6—1979 புதன் (★)❋●❋(★) வெளியூர் 28—6—1979 வியாழன் (●) இதழ்: 249

★ நல்லது செய்தாலும் பாராட்டாத கருணாநிதி

★ தமிழுக்காக எந்தத் தியாகமும் செய்வோம்

## மதுக்குடிக்கும் பழக்கத்தால் தாய்க்குலம்படும் அவதி

# புரட்சித்தலைவர் கண்ணீர் உரை

## ம. பொ. சி. விழாவில் உருக்கமான நிகழ்ச்சி



சென்னை, ஜூன் 27 - மது குடிக்கும் பழக்கத்தால் தாய்க்குலம் படும் அவதி குறித்து பேசிய புரட்சித்தலைவர் துக்கம் தொண்டையை அடைக்க உணர்ச்சி மேலீட்டால் விம்மிக் கண்ணீர் விட்டார். இதனைக் கண்டு திரண்டிருந்த மக்கள் கண்கலங்கினர்.

இந்த உணர்ச்சி மயமான உருக்கமான நிகழ்ச்சி சிலம்புச்செல்வர் ம பொ சியின் 74வது பிறந்தநாள் விழாவில் நடந்தது.

முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்டு உரையாற்றினார்.

ம பொ சி எழுதிய 'மகாத்மாவும் மதுவிலக்கும்' என்ற புத்தகத்தில் ம பொ சியின் தகப்பனார் குடித்துவிட்டு அவரது மனைவியை அடிக்கும பகுதியை முதல்வர் புரட்சித் தலைவர் படித்த போது உணர்ச்சி மேலீட்டால் விம்மிக் கண்ணீர்விட்டு பேச முடியாமல் தவித்தார்.

தமிழுக்காக இந்த அரசு எந்தத் தியாகத்தையும் செய்யும் என்றும் முதல்வர் அறிவித்தார்.

விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

இந்த நிகழ்ச்சியில் நான் பங்கு பெறவும் பங்கு பெறுவது மட்டும் அல்லாமல் இந்த தமிழகத்தில் யார் யார் வாழவேண்டும் என வரலாற்றை எதிர்பார்த்துக் காத்திருப்பவர்களில் குறிப்பிடத்தக்கவர் மேலவைத் தலைவர் தவத்தலைவர் தமிழ்ப் பெரியார் ம. பொ, சி. பிறந்த நாள் விழாவில் பங்கு பெறும் வாய்ப்பை எண்ணி மகிழ்கிறேன்பெருமைப்படுகிறேன்.

சிலரைப்பாராட்டுவதன் மூலம் அவர்கள் பெருமைக்கு உள்ளாவார்கள்.

ஆனால் சிலரைப் பாராட்டுவதன் மூலம் பாராட்டுபவர்கள் பெருமைப் படுவார்கள். அப்படிப்பட்டவர்களில் ஒருவனாக நான் ஆகியிருக்கிறேன்.

### பாராட்டுவதால் பெருமை

தமிழ்ப் பெரியார் ம. பொ. சி. யைப் பாராட்டும் போது மாபெரும் பெருமை கிடைக்கிறது.

தமிழ்ப் பெரியார் எழுதிய புத்தகங்களை இங்கே என்னை வெளியிடப் பணித்துள்ளனர்.

இந்தப் புத்தகங்களை இங்கே தான் என்னிடம் தந்துள்ளனர். முன்னதாக தந்து படிக்க வாய்ப்புத் தராதது மிகப் பெரிய குறையாகும்.

குழந்தையை அழகாக அலங்கரித்து பூவைத்து பொட்டு வைத்து வாசனை தைலம் தடவி, புத்தாடை அணிவித்து அழகு பார்க்கும் தாய் திருஷ்டிப் பொட்டாக சிறு கறுப்பு புள்ளியை அந்தக் குழந்தையின் கன்னத்தில் வைப்பாள்.

இத்தகைய குறையாகவே இதனைக் கருதுகிறேன். ஒரு சில நேரங்களில் இதுகூட நல்லது என்று கருதுகிறேன்.

ம.பொ.சி எழுதியதை மட்டும்படித்துவிட்டுவந்து இருந்தால் நாஞ்சிலார் பேச்சு அந்த அளவு மகிழ்ச்சியாக இருந்து இராது. இயற்கையாகப் பேசினார். ரசனையாக இருந்தது.

சில உண்மைகளை என் மனதில் பட்டவைகளை சொல்வதன் மூலம் மன நிறைவு பெற முடியும்.

இங்கே நாஞ்சிலார் பேசிய போது மாபெரும் பிரச்சினையைக் குறிப்பிட்டுவிட்டு மிகமிகச்சாதாரணமாக அதற்குமுற்றுப்புள்ளி வைத்தார்.

நாட்டின் பிரச்சினையும் இப்படித் தீரவேண்டும் என்று விரும்புகிறேன்.

(கைதட்டல்)

### அமைதி காக்கும் தமிழகம்

இங்குதான் அமைதி இருக்கிறது என்றார். அறிவுள்ளவர்கள் இருக்கும் நாட்டில் அமைதி இருக்கும். அறிவு, ஆற்றல்படைத்தவர்கள் தமிழ்நாட்டில் இருக்கிறார்கள். அதனால் இங்கேஅமைதிஇருக்கிறது.

(கைதட்டல்)

ஒரு மனிதன் எண்ணம், நோக்கம் நல்லதாக இருந்தாலும் செயல் பண்பாட்டுடன் இருக்கவேண்டும். இதை உணர்ந்தால் நாட்டில் நல்லவை நடக்கும்.

இந்த வரிசையில் முதல் வரிசையில் ம.பொ.சி. இருக்கிறார்.

அவர்பேசும்போது பிறர் திறமையை மறக்காமல் வெளிப்படுத்துகிறார். இதனை அனைவரும் பின்பற்ற வேண்டும்.

"கம்பரிடம் யான் கற்ற அரசியல்" என்று ஒரு புத்தகம் எழுதி இருக்கிறார். அரசியலைப் பற்றி சிந்திக்காதவர்மற்ற அரசியலைப் பற்றி அறிய முடியாது.

தங்கத்தை தரம்பார்க்க உரைகல் வேண்டும். அது போல அரசியல் பற்றி சிந்திக்க அது சரியா? தேவையா? உடன்பாடா? என்பதை உரைத்துப் பார்க்க உள்ளத்தில் ஒரு ஆசை, நீருற்றாக இருந்தாக வேண்டும்.

அந்ததகுதிபெற்றவர்கள் தான் மற்றவர்களிடம் இருந்து யான் கற்ற அரசியல்என்று எழுதமுடியும்.

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பது போல, கம்பரிடம் இருந்து யான் கற்ற அரசியல் என்று எழுதி இருக்கிறார்.

கம்பராமாயணத்தில் உள்ள குறைபாடுகளை பேரறிஞர் அண்ணா குறிப்பிட்டு இருக்கிறார்.

கம்பராமாயணம் பற்றி இன்றும் எழுதப்படுகிறது. பேசப்படுகிறது. பட்டி மன்றங்கள் இப்போதும் நடைபெறுகின்றன. அதில் இருந்து கிடைக்கும் செய்தி எடுக்க எடுக்க குறையாமல் இருக்கிறது. கம்பராமாயணம் பற்றி டி. கே. சி. எழுதியவைகள் எடுத்துக்காட்டாக இருக்கின்றன.

இப்படிப்பட்ட புத்தகங்கள் நாடு சீராக இருக்க உதவும்.

"தொல்காப்பியத்தில் இருந்துபாரதியார்வரை" என்று புத்தகம் எழுதி இருக்கிறார். இதில் வள்ளலாரைப்பற்றி சில குறிப்புகள் இருக்கின்றன.

### பாராட்ட மனப்பக்குவம்

நம்மோடு இருப்பவர்களைப் பாராட்டும் மனப்பக்குவம் நமக்கு வருவதில்லை. இதனால் நம்மவர்கள் புகழ் வெளி உலகிற்குத் தெரியாமல் போகிறது.

புலவர் ஒருவர் மற்றொருவரைப் பாராட்டும் எண்ணம் வளரவேண்டும், அப்படிப் பாராட்டாமல்இருந்தால் தமிழ் மொழியும் வளராது. தமிழ்நாடும் வளராது.

### பண்பாடு

தமிழ், தமிழர், தமிழ் நாடு என்று பேசும் போது ஒருவரை ஒருவர் மதிக்கும் பண்பாடு ஒவ்வொரு தமிழர் மனதிலும் பதிய வேண்டும்.

வெளி நாடுகளுக்குப் போகும் போதுதான் இதன்மதிப்புத்தெரிகிறது.

நம் நாட்டில் இருந்து வெளிநாடு போகும் பாடகர்கள் நாட்டியம் ஆடுபவர்கள் நிகழ்ச்சி நடக்கும் போது முதலில் இருந்து கடைசி வரை கைத்தட்ட வேண்டிய நேரத்தில் அனைவரும் கைதட்டுவார்கள்.

இங்கே இப்படி இல்லை மற்றவர்களைப் பாராட்டினால் தங்கள் புகழ்குறையும் என்றுகருதுகிறார்கள். இதனால்பிறரைப் பாராட்டுவதில் கஞ்சத்தனம் ஏற்படுகிறது.

மகாத்மாவும் மதுவிலக்கும் என்ற புத்தகத்தில்சில பகுதிகளை நான் இங்கே படித்துப் பார்த்தேன்.

தமிழ்ப் பெரியார் எண்ணத்தை தியாகத்தைப் பின்பற்றுகிறவர்கள் எண்ணிக்கை பெருகவேண்டும்,

ம. பொ. சி. ஒரு தமிழராக இருக்கிறார். மனதில் நல்லது என்று பட்டதை ஒப்புக்கொள்கிறார். தவறு என்று பட்டால் அந்தத் தவறை சுட்டிக்காட்டுகிறார்இதனை மற்றவர்கள் பின்பற்ற வேண்டும்.

### சமது இடம் நிலைக்குமா?

நாஞ்சிலாரைப் பற்றி நண்பர் அப்துல்சமத் தெரிவித்த கருத்து பற்றி நாஞ்சிலார் இங்கே குறிப்பிட்டுக் கூறினார். அவர்ஏதோ நல்ல இடத்தில் இருப்பது போலவும்-அது நிலையான இடம் என்கின்ற கற்பனையில் நாஞ்சிலார் அங்கே வருவார் என்றும் கூறி இருக்கிறார்.

இந்த புத்தகத்தில் 'மது விலக்கும் தி. மு. க,வும்'' என்று ஒரு தலைப்பு இருக்கிறது. அதில் ஒரு பகுதியைப் படிக்கிறேன்.

(முதல்வர் படிக்கிறார்)

தமிழக ஆளுநர் பிறப்பித்துள்ள 1977ம் ஆண்டு மதுவிலக்குச் சட்டத் திருத்த அவசர சட்டத்தை முஸ்லீம்லீக் எதிர்த்துள்ளது. லீக் மதுவிலக்கு கொள்கையைக் கொண்டது. அதுஇஸ்லாம் தருமம் என்றும் கூறிவருகிறது.

முன்னர் திமுக ஆட்சிக் காலத்தில் மதுவிலக்குச் சட்டம் ரத்து செய்யப் பட்டபோது அதனைக் கடுமையாக எதிர்த்தது முஸ்லிம்லீக் அதே லீக் இப்போது அனைத்திந்திய அண்ணா திமுக அரசு மதுவிலக்கைத் தீவிரமாக அமல் நடத்த முன்வரும் போது அதை எதிர்ப்பானேன்?

அவசரச் சட்டம் கடுமையானது என்று தனது எதிர்ப்புக்குக் காரணம் காட்டுகின்றது முஸ்லீம் லீக், இதுதான் காரணம் என்றால் சிறிது அனுதாபத்துடனாகிலும் அந்த எதிர்ப்பைத் தெரிவித்து இருக்கலாமே. மாறாக எதிரியின் போர்க் குரலிலேயேஎதிர்ப்பு தெரிவிப்பானேன்?

(இவ்வாறு படித்தார்)

இதற்கு சமது பதில் தருவார் என்று நினைக்கிறேன்.

(மீண்டும் புத்தகத்தில் இருந்து படிக்கிறார்.)

இரு கம்யூனிஸ்டுகளும் அவசரச் சட்டத்தை எதிர்த்துள்ளன. குடிப் பழக்கத்தை அவைவிரும்பவில்லையென்றாலும் அத

(3-ம் பக்கம் பார்க்க)

★ மது ஒழிப்பில் மகாத்மாவுக்கு அடுத்தபடியாக மன உறுதி படைத்த புரட்சித்தலைவர்

## சுட்டவனையும் அண்ணன் என்று அழைத்த

# பண்பாடு ஆளுகிறது

## ம. பொ. சி. உணர்ச்சி உரை

சென்னை, ஜூன். 27- மது ஒழிப்பில் மகாத்மா காந்திக்கு அடுத்தபடியாக மன உறுதி படைத்தவர் புரட்சித்தலைவர். சுட்டவனையும் அண்ணன் என்று அழைக்கும் தமிழ்ப்பண்பாடுமிக்க அவர் தமிழகத்தை ஆளுகிறார் என்று சிலம்புச் செல்வர் ம. பொ. சி. உணர்ச்சியுரை யாற்றினர்.

புரட்சித்தலைவர் ஆட்சியில் மது ஒழியவில்லை என்றால் எப்போதும் அது ஒழியாது என்றும் தமிழகம் போல் மொத்த இந்தியாவும் ஆகவேண் வேண்டும் என்று அவர் கூறினார்.

சென்னை ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடைபெற்ற ம. பொ,சி. அவர்களின் 74 வது பிறந்த நாள் விழாவில் நன்றியுரையாற்றிய சிலம்புச் செல்வர் ம பொ சி கூறியதாவது:

"முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களுடைய பேச்சோடு இந்த விழாவை முடித்திருக்க வேண்டும். ஆனால் நன்றிகூறவேண்டும் என்கிற பண்பாட்டுக்காக சில கருத்துக்களைச் சொல்ல முன் வந்து நிற்கிறேன்" என்று உணர்ச்சி தழுதழுக்க தனது உரையை விழா நாயகர் சிலம்புச் செல்வர் ம. பொ. சி தொடங்கினார்.

அவர் மேலும் கூறியதாவது:

புதிய தமிழகம்படைத்து விட்டோம்! இந்த தமிழகத்தில் தமிழனுடைய பண்பு ஆளவேண்டும் என்பதே என் குறிக்கோள்.

இன்று தமிழகத்தை ஆளும் முதல்வரை நான் நினைக்கிறேன். அவரைப் பற்றி இங்கே ஒரு செய்தியைச்சொல்லியாகவேண்டும். தன்னைச் சுட்டுவிட்ட ஒருவரைப் பார்த்து அந்த நிலையிலும் அண்ணே என்று அழைத்தவர் அவர். அந்த நிலையிலும் துப்பாக்கியால்தன்னைச் சுட்டவர் என்று தெரிந்த பிறகும் தன்னைச் சுட்டவரைப் பார்த்து அண்ணே என்று அழைத்தாரே அதுதான் தமிழ்ப்பண்பாடு. அந்தப் பண்பாடு வாழவேண்டும். அந்தப் பண்பாடு தமிழகத்தை ஆளவேண்டும்.

நான் இரண்டாவது வரைதான் படித்தேன். சூழ்நிலை காரணமாக நானே படிக்கக் கற்றுக் கொண்டேன். 43வது வயதில் எழுதத் தொடங்கினேன். இன்று இந்த விழாவில் வெளியிட்ட நூல்களுடன் நூறு நூல்களை எழுதியுள்ளேன்.

இன்று தமிழக முதல்வருடைய பேச்சைக் கேட்ட பிறகு வாழ்வில் முதன்முதலாக இன்றுதான் நான் எழுதியதன் பலனைப்பெற்றேன்.

நான் எழுதிய நூறாவது நூல் "மகாத்மாவும் மதுவிலக்கும்" என்பது. அளவில் அது சிறியது.

நான்எழுதியநூல்களுக்கு எத்தனையோ பரிசுகள் கிடைத்துள்ளன. தமிழக அரசின் சார்பில் இதுவகை என் நூல்களுக்கு பரிசு கிடைக்கவில்லை. சொல்லியிருந்தால்இன்றையஆட்சியில் கிடைத்திருக்கும்.

ஆனால் அவை என் தமிழுக்கு எழுதிய நூல்கள். அதுவே எனக்கு மகிழ்ச்சி,

இதே இடத்தில் என்னுடைய மணிவிழா நடந்தது. பேரறிஞர் அண்ணா வந்து வாழ்த்தினார். இன்று இதேமண்டபத்தில் 74வது பிறந்த நாள் விழா நடக்கிறது. அவருடைய தம்பி வந்து வாழ்த்துகிறார். அன்று நடந்த மணி விழாவைப் போலவே மனம் நிறைகிறேன்.

நான்தமிழன் என்றஇன உணர்வோடு இருப்பதால் கட்சிகள் எனக்கு மறந்துவிடுகின்றன. தமிழன் என்பதால்இன்றைய தமிழர் ஆட்சியைக் கண்டு மனம் பூரிக்கிறேன்.

மதுவிலக்கைப்பற்றி இங்கே முதல்வர் எடுத்



துக்காட்டினார்.

அன்று என் தாய் பட்ட வேதனையைக் கண்டேன். எத்தனை இளைஞர்கள் எத்தனை குடும்பங்கள் பாழாகின்றன. ஒரு குடும்பத்தில் ஒரு தந்தை குடிப்பதால் அந்தக் குடும்பம் எப்படி சீரழிகிறது என்பதை என்னைப் போலவே உணர்ந்தவர் முதல்வர்.

மதுவிலக்குக் கொள்கையில் மகாத்மாகாந்திக்கு அடுத்தபடியாக நமது முதல்வர் அவர்கள் உறுதியாக இருக்கிறார்கள். இதில் அவர் வெல்வது உறுதி. இந்தப்பணியில் அவருக்கு உதவியாக என் உயிரையும் தருவேன்,

இங்கு 4 நூல்கள் வெளியிடப்பட்டன. அதில் வேறு இரு நூல்களைப் பற்றி முதல்வர் பேசுவார் என்று நான் எதிர்பார்த்தேன்.

ஆனால் முதல்வர் அவர்கள் மகாத்மாவும் மதுவிலக்கும் என்ற நூலையே எடுத்துக்காட்டிப் பேசினார்.

அதன் மூலம் நான்எழுத்தாளன் ஆன பலனைஇன்றுதான் அடைந்தேன்.

மதுவிலக்கு பற்றிய என்னுடைய இந்த நூலைக் குறித்து முதல்வர் பேசிய பேச்சைக் கேட்க என் தாய் இன்று இல்லையே என்று எண்ணினேன்

நூறு நூல்களை நான் எழுதியிருந்தாலும் மகாத்மாவும்மதுவிலக்கும் என்ற இந்த நூல்தான் நமது முதல்வரின் கண்ணீரை விலையாகப் பெற்றிருக்கிறது.

இதற்காகவே இந்த நூலுக்கு ரூபாய் நூறு விலை வைத்திருக்கலாம். என் தாய்போல எத்தனை

(2-ம் பக்கம் பார்க்க)

# ம. பொ. சி.க்கு டாக்டர் பட்டம்: புரட்சித்தலைவர் கொடுத்த குரல்

சென்னை, ஜூன் 27- சிலம்புச் செல்வர் ம. பொ சியின் 74 வது பிறந்த நாள் விழாவில் அவருக்கு டாக்டர் பட்டம் கொடுப்பது பற்றி ஆரவாரத்துடன் கருத்துக்கள் பரிமாறப்பட்டன.

தலைமை உரை ஆற்றிய அமைச்சர் ஆர். எம். வீ. தனக்கேயுரிய அழுத்தத்துடன், பல்கலைக்கழகத்தினை மிரட்டி பணியவைத்து டாக்டர் பட்டத்தைப் பெற்றவரலாறுகளை எடுத்துக்காட்டி தமிழே உருவாயுள்ள ம. பொ.சி-க்கு இன்னும் ஏன் பல்கலைக் கழகங்கள் டாக்டர் பட்டம் தரவில்லை என்று கேட்டார்.

அடுத்து பேசிய புலவர் கீரன் டாக்டர் பட்டம் தரும் பிரச்சினையை மிகுந்த நயத்தோடு எடுத்துக் காட்டினார். சிலப்பதிகாரத்தைப்பற்றி ம,பொ. சி. எழுதியுள்ளார். நமக்கு அவரைப்பற்றித் தெரியும். ஆனால் பிற்காலத்து சந்ததியினர் ம,பொ.சி அவர்களின் நூல்களைப் படிக்கும் போது டாக்டர் பட்டம் பெற்ற ஒருவர் எழுதிய நூல் என்று சொன்னால்தான் படித்து ஏற்பார்கள். ஆகவே எப்படியாவது ம. பொ. சி. அவர்களுக்கு இந்த ஆண்டு டாக்டர் பட்டம் கிடைக்க அமைச்சர் ஆர். எம். வீ. முயற்சி எடுக்க வேண்டும் என்று புலவர் கீரன் கேட்டுக் கொண்டார்.

தலைமை வகித்த அமைச்சர் ஆர். எம். வீ. அடுத்து மீண்டும் அரசின் நிலையை விளக்கினார். பல்கலைக் கழகம் தன்னாட்சி நிறுவனம். அதன் விவகாரங்களில் அரசு தலையிட முடியாது.

நாம் நமது உணர்வுகளை எடுத்துக் காட்டிவிட்டோம். முன்பு நடந்தது போல ஒரு மாணவனைக் கொன்றுவது டாக்டர் பட்டம் கொடுங்கள் என்று பல்கலைக்கழகத்தை மிரட்டிப் பணியவைக்க இந்த அரசு தயாராக

(2-ம் பக்கம் பார்க்க)

## ம. பொ. சி. உணர்ச்சி உரை

முதல் பக்கத் தொடர்ச்சி

தாய்மார்கள் அழுது கொண்டிருக்கிறார்கள். குடியினால் எத்தனை குடும்பங்கள் அழிந்து கொண்டிருக்கின்றன. இந்தக் கொடுமையை ஒழித்து எப்போது சின்னஞ்சிறு உள்ளங்களுக்கு வாழ்வு அளிக்கப் போகிறோம்.

நான் எழுதிய இந்த சின்னஞ்சிறு நூலுக்கு மது விலக்கு என்று பெயர் வைக்கலாம் என நினைத்தேன். ஆனால் மகாத்மாவும் மதுவிலக்கும் என்று பெயர் வைத்தேன். மது விலக்கு என்ற லட்சியத்துக்காக தன்னை அர்ப்பணித்துக்கொண்டமகான் அல்லவா அவர்?

இந்நிவிழாவில் முதல்வர் பேசியதைக் கேட்டு என் மனம் எங்கோ சென்று விட்டது.

கருத்துக்களைக்கோர்வையாகச் சொல்வதற்குக்கூட இயலாதநிலையில் உணர்ச்சி வசப்பட்டு நிற்கிறேன்.

நான் பண்பாடு காக்கப் பாடுபடுகிறவன். தமிழக முதல்வர் அவர்கள் இந்த மாநிலத்தின் பண்பாட்டின் பிரதிநிதியாக நின்று காத்து வருகிறார்.

முன்பு கூட்டணியாக இருந்து மற்ற அரசைப் பற்றிகருத்துச்சொன்னேன். இன்று கூட்டணியில் இல்லை, கட்சி அரசியலில் இல்லை, பொதுவான அரசியலைச் சொல்கிறேன். பொதுவான அரசியல் கூட சொல்லக் கூடாது என்றால் பதவியைத் துறப்பேனே தவிர அரசியல் கருத்துக்கள் கூறும் உரிமையைத் துறந்திட மாட்டேன்.

இன்றைய தமிழகமுதல்வர் நடத்தும் ஆட்சியைப் பாராட்டுவது அவசியம் என்பதால் பாராட்டுகிறேன்.

இவரது ஆட்சியில் மது விலக்கு வெற்றி பெற வேண்டும் அழுவதற்கு ஜீவனற்ற மக்களின் கண்ணீர் துடைக்கப்படவேண்டும்.

தமிழக முதல்வர்ம் ஜி ஆர் ஆட்சியில்அவருடைய தலைமையில் நடைபெறுகிற இந்த ஆட்சியில் குடி ஒழியவில்லை என்றால்பிறகு மது ஒழிவதற்கு சந்தர்ப்பமே இருக்காது.

தமிழகம் மற்றமாநிலங்களுடைய நிலைமைக்குத் தள்ளப்படவில்லை. தமிழகம்போல இந்தியா ஆகட்டும். இந்தியாவின் மற்ற பகுதிகள்போல தமிழகம் ஆகவேண்டாம்.

அதற்கு பாடுபட உறுதி ஏற்போம்.

நான்கூட எண்ணினேன் மத்திய அரசு தேடுகிற ஒருவரை ஒளித்து வைப்பதற்குக் கூடுதல் அதிகாரம் பயன்படுமா என்றால் நான் கொள்கைப் பரப்பியதில் தவறு செய்துவிட்டேனா என்றுகூடவருந்தினேன்.

மத்திய அரசு தேடுகிற ஒருவரைமறைத்துவைத்து அப்படி மறைத்து வைத்ததையும் பெருமையாக பேசுகிறார்களே!

அது வல்ல தேசபக்திக்கு அடையாளம் மாநிலமும் மத்தியமும் ஒன்றுடன் ஒன்று இணைந்தவை.

இவ்வாறு சிலம்புச்செல்வர் ம பொ சி கூறினார்.

## எழும்பூர் வட்ட அமைப்பாளர் கூட்டம்

எழும்பூர் தொகுதி வட்ட அமைப்பாளர்கள் கூட்டம் 28-ந் தேதி (வியாழன்) மாலை 6.30 மணிக்கு சென்னை - புதுப்பேட்டையில் உள்ள 3 சவுரி முத்து தெருவில் நடக்கிறது.

எழும்பூர் தொகுதி வட்ட அமைப்பாளர்கள் தவறாது வருமாறு,தொகுதிஅமைப்பாளர் க.தெய்வசிகாமணி கேட்டுக் கொள்கிறார்.

## அரங்கநாயகம் ராசாமுகமது நாளைஇலங்கை பயணம்

சென்னை, ஜூன் 27 இஸ்லாமிய இலக்கிய மாநாட்டில் பங்கேற்க, கல்விஅமைச்சர்செ.அரங்கநாயகம்; கிராமத்தொழில் அமைச்சர் ராசாமுகமது இருவரும் நாளை காலை 9 மணிக்கு விமானம் மூலம் கொழும்பு நகருக்கு பயண

## விவசாய வருமான வரிச்சட்டம்: புதிய சலுகைகள்

சென்னை,ஜூன் 27–விவசாய வருமான வரி திருத்தச் சட்டத்தையொட்டி சில புதிய சலுகைகளை அரசு வெளியிட்டுள்ளது.

அரசு பத்திரிகைக் குறிப்பில் இது குறித்து கூறப்பட்டுள்ளதாவது:

1979-ம்ஆண்டு விவசாய வருமானவரி திருத்த சட்டம் (1979-80 வரி விதிப்பு ஆண்டு) 1-4-79 முதல் அமுலுக்கு வந்துள்ளது.

நிலங்களின் விவசாயம் செய்யப்பட்டுள்ள பயிர்களின் அடிப்படையில் இனிமேல் ஸ்டாண்டார்டு ஏக்கர் கணக்கிடப்படும். அதே நிலத்தில் இரண்டாவது மூன்றாவது சாகுபடி செய்யப்படுமாயின் ஸ்டாண்டர்டு ஏக்கரின் அளவு அதிகரிக்கப்படும்.

சாகுபடி செய்யப்படும் நிலம் முழுக்க இறைவைப் பாசனம் மூலம் பாசனம் பெறுமாயின் ஸ்டாண்டர்டு ஏக்கர் கணக்கிடுவதில் 25 சதவிகிதம் குறைத்துக் கணக்கிடப்படும். ஒருவருக்கு உள்ள நிலங்கள் மேலே குறிப்பிட்டுள்ளவாறு ஒருதரப்பட்ட நிலத்திற்கு மேல் இருந்தால் அவ்விதம் அவர் வைத்திருக்கும் நிலம் முழுவதும் சம்பந்தப்பட்ட நிலத்திற்கான விகிதாச்சாரத்தில் ஸ்டாண்டர்டு ஏக்கராக மாற்றப்படும்.

ஒரே சமயத்தில் ஒரு நிலத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட பயிர்கள் பயிர் செய்யப்பட்டிருந்தால் ஒவ்வொரு பயிருக்கும் உள்ள விகிதாசாரப்படி ஸ்டாண்டர்டு ஏக்கர் கணக்கிடப்படும்.

புதிய வரி விதிப்பு விகிதங்கள் கீழ்க்கண்டவாறு திருத்தியமைக்கப்பட்டுள்ளன:

வேளாண்மை வருமானத்தில் முதல் 8 ஆயிரம் ரூபாய்க்கு வரி இல்லை. அடுத்த 7ஆயிரம் ரூபாய்க்கு ரூபாய்க்கு 25 காசு, அடுத்த 5 ஆயிரம் ரூபாய்க்கு, ரூபாய்க்கு 30 காசுமொத்தவேளாண்மை வருமானத்தில் அடுத்த 5 ஆயிரம் ரூபாய்க்கு, ரூபாய்க்கு 35காசு,அடுத்த 5 ஆயிரம் ரூபாய்க்கு, ரூபாய்க்கு 45காசு,அடுத்த இருபதாயிரம் ரூபாய்க்கு, ரூபாய்க்கு 55 காசு அடுத்த 50 ஆயிரம் ரூபாய்க்கு, ரூபாய்க்கு 60 காசு மொத்த வேளாண்மை வருமானத்தில் எஞ்சிய தொகைக்கு ரூபாய்க்கு 65 காசு.

ஆனால் மொத்த வேளாண்மை வருமானம் 10 ஆயிரம் ரூபாய்க்கு மேற்படாதிருந்தால், வேளாண்மை வருமான வரி செலுத்த வேண்டியதில்லை.

மொத்த வேளாண்மை வருமானம் ரூ. 10 ஆயிரத்துக்கு மேற்பட்டிருந்து ஆனால் ரூ. 11 ஆயிரத்து நூற்றுக்கு அதிகமாகாமல் இருந்தால் செலுத்த வேண்டிய வேளாண்மை வருமான வரி 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் உள்ள தொகைக்கு 70 சதவிதத்துக்கு மேற்படாமல் இருக்க வேண்டும்.

ஆனால் நிறுவனங்களைப் பொறுத்தவரை மொத்த வேளாண்மை வருமானம் முழுவதன் மீதும் உயர்ந்த அளவு வீதத்தில் வேளாண்மை வருமான வரி விதிக்கப்படும்.

ஒரு ஸ்டாண்டார்டு ஏக்கருக்கான இணக்க முறை வரி விதிப்பு விவரம்:

முதல் 20 ஸ்டாண்டர்டு ஏக்கருக்கு வரி இல்லை. அடுத்த 5 ஏக்கருக்கு 15 ரூபாய், அடுத்த 5 ஏக்கருக்கு 20 ரூபாய் அடுத்த 5 ஏக்கருக்கு 30 ரூபாய், அடுத்த 5 ஏக்கருக்கு 40 ரூபாய், அடுத்த 10 ஏக்கருக்கு 50 ரூபாய், அடுத்த 10 ஏக்கருக்கு 60 ரூபாய், அடுத்த 10 ஏக்கருக்கு 70 ரூபாய் அடுத்த 10 ஏக்கருக்கு 80 ரூபாய் மீதமுள்ள ஸ்டாண்டர்டு ஏக்கருக்கு நூறு ரூபாய் ஆக வரி விதிப்பு இருக்கும்.

இந்த திருத்த சட்டத்தின் மூலம் விவசாயிகள் பெறும் சலுகைவரிவிலக்கு 10 ஸ்டாண்டர்டு ஏக்கரிலிருந்து 20 ஸ்டாண்டர்டு ஏக்கராக உயர்த்தப்படுகிறது.

5 ஆயிரம் ரூபாய்வரை வேளாண்மை வருமானம் இருந்தால் வரி இல்லை என்றிருந்ததை திருத்தச் சட்டத்தின் மூலம் 10 ஆயிரம் ரூபாய் வரை வரி இல்லை என்று மாற்றியமைக்கப்பட்டுள்ளது.

மலைத்தோட்டப்பயிருக்கு இணக்க முறையில் வரி செலுத்த ஏற்கனவே 50 ஸ்டாண்டர்டு ஏக்கர்வரை என்றிருந்த வரம்பு தற்போது நூறு ஸ்டாண்டர்டு ஏக்கர்வரை என்று உயர்த்தப் பட்டுள்ளது.

இவ்வாறு அரசின் பத்திரிகை குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

## புரசை பகுதி அமைப்பாளர் கூட்டம்

புரசைப் பகுதி வட்ட அமைப்பாளாகள் கூட்டம் 28-ந் தேதி (வியாழன்) இரவு 7 மணிக்கு அயன்புரத்தில் உள்ள ஓட்டல் இலாஹியில் நடக்கும். புரசைப்பகுதி வட்ட அமைப்பாளர்கள் தவறாது வருமாறு பகுதி அமைப்பாளர் தரங்கை கண்ணன் கேட்டுக் கொண்டுள்ளார்.

## தீ விபந்து பகுதி: ஆர். எம். வீ. ஆறுதல்

சென்னை, ஜூன் 27-ராயப்பேட்டையிலுள்ள புதுப்பேட்டை பகுதியில் நேற்று மாலை ஏற்பட்ட தீ விபத்தினால் பாதிக்கப்பட்ட பகுதிகளை அமைச்சர் ஆர். எம். வீ. இன்று பகல் பார்வையிட்டார்

அமைச்சர் ஆர். எம். வீயுடன் வழக்கறிஞர் ஆர் ராமகிருஷ்ணபாபு, பா. அங்கமுத்து, த. சதானந்தம், பிச்சைக்கண்ணு, குமரிமாவட்ட அவைத் தலைவர் டாக்டர் நாகராஜன், சிற்பி மோகனதாஸ் மற்றும் தோழர்கள் வந்திருந்தனர்'

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம்சாலை,சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்பட்டுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004.

ஆசிரியர் : எம்.ஜி.சக்ரபாணி

## ம. பொ. சிக்கு பட்டம்

(1-ம் பக்க தொடர்ச்சி)

இல்லை. இந்தஅரசு அப்படி செய்யாது என்றார்.

அடுத்துஇதேபிரச்னையை நாஞ்சிலார் எடுத்துக் கூறினார் ''இத்தனை பெரிய அவையின் உணர்வுகள் அரசின் கருத்துக்கள் மொத்த தமிழகத்தின் உணர்வுகள் பல்கலைக்கழகத்தின் கதவுகளைத்தட்டாதா? அதன் கதவுகள் திறக்காதா?'' என்றுநாஞ்சிலார் கேள்வி கேட்டார்.

இறுதியாக கூட்டம் முடிந்தபிறகு முதல்வர் புரட்சித்தலைவர் ஒலிபெருக்கி முன்னால் வந்து ''இந்த ஆண்டுக்குள் ம.பொ,சி. அவர்களுக்கு டாக்டர் பட்டம் அளிக்கப்படும் என்று நம்புகிறேன். தமிழுக்காக இந்த அரசு எந்த தியாகமும் செய்யத் தயங்காது என்பதை ஐயா ம. பொ. சி அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று பெருத்த ஆரவாரத்துக்கிடையே பிரகடனம் செய்தார்.

## தீவிபத்து: அரசு உதவி

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

கண்ணு, யுவராஜ், எஸ். கே. அமர்பாட்சா, பாஸ்கர், எஸ். சர்தார், 98 வது வட்ட அமைப்பாளர் கே.சுப்பராயன், 101 வது வட்ட அமைப்பாளர் சிவகுமார், 72 வது வட்ட அமைப்பாளர் ஆர்.கணபதி, எம். வீராசாமி, ஆர். சதானந்தம், நீதியின் குரல் சிட்டிபாபு, எம். பி. சேகர், 108 வது வட்டத்தைச் சேர்ந்த தாமோதரன்,செல்வராஜ் முனுசாமி, வீரபத்திரன். எத்திராஜ், விநாயகம், சாமிக்கண்ணு, கன்னியப்பன்,ஏழுமலை, பார்த்தசாரதி, பச்சையப்பன், சர்க்கரை, அலெக்சாண்டர் ஆகிய கழகத் தோழர்கள் தீயணைப்புப் பணியில் ஈடுபட்டனர்

அரசு அதிகாரிகள்பாதிக்கப்பட்டஇடத்தை பார்வையிட்டு சேதவிவரங்களை சேகரித்து வருகிறார்கள்.

### நிவாரண உதவி

தீவிபத்தினால் பாதிக்கப்பட்ட பகுதியில் உள்ளவர்களுக்கு வேட்டிசேலை வழங்கப்பட்டது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் 80ரூபாய் உடனடியாக உதவித் தொகை வழங்க மாவட்ட ஆட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

## நாஞ்சிலார் வேண்டுகோள்

(3-ஆம் பக்கத்தொடர்ச்சி)

உறவினர்கள் வரலாம் என்ற நிலை ஏற்பட்ட போது யாரும் பார்க்க வரவில்லை. அதற்கான வழிச்செலவுக்குக்கூடயாரிடமும் பணம் இல்லை என்று எழுதியிருக்கிறார். இந்த இடத்தைப்படித்தவர்கள் அழாமல் இருக்க முடியாது.

காந்தியஉணர்வுஅவரை அப்படி எழுதவைத்திருக்கிறது வறுமையை சுவைத்தேன், என்று எழுதியிருக்கிறார். இப்படி எழுதுபவர்கள் நாட்டிலே கொஞ்சம் குறைவு. உயர்ந்த இடத்திற்கு வந்த பிறகு தான் இருந்த நிலையை மறந்து நான் சின்னவயதில் எப்படியிருந்தேன் தெரியுமா?

தாமரை; தடாகத்தில் விளையாடினேன் என் தாயார் எனக்கு ராசிபுரம் நெய் ஊற்றி பாலும் தயிரும் ஊட்டி வளர்த்தார். நான்சாப்பிட மறுத்திருக்கிறேன் என்றெல்லாம் எழுதுவார்கள்.

### வறுமைத் தேள் கொட்ட...

வறுமைத்தேள்கொட்டக் கொட்ட வாழ்ந்தவர் ம. பொ. சி. நான் பச்சையப்பன் கல்லூரியில் படித்த போது ஒரு முறை மூதறிஞர் ராஜாஜி வந்து பேசினார்.

''நான் வறுமையை சுவைத்தவன் நான்இதைச் சொல்வதற்குஎன்றும்வெட்கப்பட்டது இல்லை'' என்று ராஜாஜி சொன்னார்.

என் பக்கத்திலே அமர்ந்துள்ள புரட்சித்தலைவர் முன்புபேசியபேச்சுக்கள்என் கண் முன்னால் நர்த்தனம் ஆடுகின்றன.

''ஏழு வயதில் நான் வறுமையை சுவைத்தேன். நீரை மட்டும் அருந்தி நான் உயிர் வாழ்ந்து இருக்கிறேன். தமிழ் மக்கள் எனக்கு வாரி வாரி தந்தனர். நானும் அவர்களுக்குவாரிவாரி தருகிறேன்'' என்று பேசியிருக்கிறார்.

### பொருளாதாரம்

பொருளாதாரம் தெரியுமா என்று அவரைக் கேட்டனர்.

அந்த பொருளாதாரம் எனக்கு தெரியாமல் இருக்கலாம் வறுமை எப்படியிருக்கும்? வறுமை இருந்தால் மக்கள் எப்படி துடிப்பார்கள் என்ற பொருளாதாரம் எனக்குத் தெரியும். எனது பொருளாதாரம் அனுபவ பொருளாதாரம்ஏட்டுச்சுரைக்காய் எனக்கு தெரியாது. என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறியிருக்கிறார்.

சபை நடவடிக்கைகளை திறம்பட நடத்துவது என்பது மிகவும் சிரமமான காரியம் ஆகும். அந்தக் கொந்தளிக்கும் கடலில் நீச்சல் அடிக்கத் தெரிந்திருக்கவேண்டும். அப்போது மிகவும் சிரமமாக இருக்கும். ஆனால் நமது சிலம்புச் செல்வர் எந்த சிரமமுமின்றி சபை நடவடிக்கைகளை நடத்தி வருகிறார்.

கடுமையான சிரமங்கள் மேலவையில் இல்லை.அந்த வெப்பத்தை சட்டப் பேரவைத் தலைவர் முனுஆதி அனுபவித்து வருகிறார்.

### நடுநிலை நிற்பவர்

மோசமான- வேகமான சூழ்நிலை ஏற்பட்டாலும் ஒரவஞ்சனையில்லாமல் இவர் இன்னார், இவர் இனியர், இவர் வேண்டியவர், இவர் வேண்டாதவர் என்று பாகுபாடு காட்டாது அனைவரையும் ஒன்றாகப் பாவித்து நல்ல தலைவனாக இருந்து சபை நடத்தும் தகுதி ம. பொ. சிக்கு இருக்கிறது.

ம. பொ. சியின் லட்சியம் மாநிலத்துக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்பதுதான். அந்த அதிகாரத்தை தமிழகம்பெற்றுத் தீர வேண்டும் என்று விரும்புகிறவர் ம.பொ.சி.

தமிழ் கலாச்சாரம் பேணிக் காக்கப்பட வேண்டும்.வேறுமையில்ஒற்றுமை காணவேண்டும்.பன்மையில் ஒருமை காண வேண்டும் என்று விரும்பியவர். அதற்காக அந்த தனித்தன்மைக்காக அன்று அண்ணாவோடு இருந்து செயல்பட்டார். இன்று நம்மோடு இருந்து செயல்படுகிறார்.

இந்திய துணைக்கண்டத்தில் இன்றுள்ளநிலைஅதிர்ச்சியும் அச்சமும் ஊட்டுவதாக உள்ளது.

அபாய கட்டம் செல்லாது என்று நாம் நம்புவோமாக.

நம்பினால் மட்டும் போதாது.

நடவடிக்கை தேவை.

இந்தக்குரல் சென்றுசேர வேண்டிய இடத்துக்கு சேரட்டும்.

### எம். பி.க்களை சந்தித்தல்

இந்தியாவின் பல பகுதிகளுக்கும் சென்று வந்த 4 எம்.பி.க்களை நான்அண்மையில் சந்தித்தேன். அவர்கள் நாகாலாந்து அருணாசலப்பிரதேசம் மேகாலயா, அசாம் வடகிழக்கு எல்லை லடாக் ஆகிய பகுதிகளுக்கு எல்லாம் சென்று வந்தார்கள்.அந்த பகுதிகளில் இருந்தமுக்கியமான அனைவரையும் சந்தித்துத் திரும்பினார்கள்.

அவர்கள் சில கேள்விகளைக் கேட்டார்களாம்!

இந்தியாவுடன் இருக்கிறீர்களே பிரச்சினைகள் உண்டா என்று கேட்டார்களாம் அந்த எம்.பிக்கள்

எங்களுக்கு எந்தப் பிரச்சினையும்இல்லைஎன்றார்களாம்.

அந்த எம்பிக்கள் ஆச்சரியப்பட்டார்களாம்.

எங்களுக்கு பிரச்சினைகள் இல்லை. ஆனால் எதைத் தேர்ந்தெடுப்பது என்று தான் முடிவுசெய்ய வேண்டும். தருகிறீர்களா எடுத்துக் கொள்வதா என்பதை முடிவு செய்ய வேண்டும் என்றார்களாம்.

இந்த உணர்வு கிழக்குப் பகுதியிலே இருப்பதாக அந்த எம், பி, க்கள் கூறினார்கள்.

இத்தகைய கொடிய நோய் பரவும்போது டெல்லி வேறு விவகாரங்களில் ஈடுபட்டிருப்பது வேதனை தருகிறது.

மானேக்ஷாகடிதம்எழுதினாராஇல்லையாஎன்பதல்ல. இந்த சூழ்நிலை இனி ஒரு இடத்துக்கு தாவுமானால் நிலைமை என்ன ஆகும்?

நான் புரட்சித்தலைவரை புகழ்வதற்தாக இங்கே இதனை சொல்லவில்லை.

தமிழகத்தில் உள்ள அமைதி வேறுஎந்த மாநிலத்திலாவது இருக்கிறதா?

இங்கு எரிமலையின் வெடிப்பு இல்லை. அச்சம் இல்லை. அபாயம் இல்லை. அந்த அளவு புரட்சித்தலைவருடைய தலைமையில் இந்த மாநிலம் நடைபோடுகிறது.

இதனால்பிரச்சினை இல்லை என்றுவாதாடவேண்டாம். ஆனால் பிரச்னைகளை தீர்க்கதரிசனத்தோடு ஆற்றலோடு அணுகுகிற தலைமை இங்கே இருக்கிறது.

நேற்று வரை ஒன்றாக இருந்த மாநிலத்தில் இன்று மாறுதல் வெடித்துச்சிதறுகிறது. இது ஆரோக்கியமாகுமா?

பக்கத்து மாநிலத்திலே பல கட்சி ஆட்சி. அங்கேயும் பிரச்சினைகள். இன்னும் ஒரு மாநிலத்திலே 47 எம்.எல். ஏக்கள் போர்க் கொடி.

வடக்கே ஒரு மாநிலத்தில் கூட அமைதி இல்லை. நாம் நம்பிக்கை இழந்துவிடவில்லை. அளவுக்கு மீறி அச்சம் கொண்டுவிடவில்லை.

ஆனாலும் தங்களைக் கீழே தள்ளிவிட்டு பிரச்னைகளைமேலேவைத்து பரிசீலனை செய்ய வேண்டாமா?

பக்குவம் பெற்றவர்களே கவனிக்கத் தவறினால் பச்குவம் பெறாத மற்றவர்கள் என்ன ஆவார்கள்? சிந்தித்துப் பாருங்கள்.

இன்று ம. பொ. சிக்கு மரியாதை செலுத்துகிறோம் என்றால் அவரது தியாகத்துக்கு மரியாதை செலுத்துகிறோம் என்று பொருள்.

அவரது பேச்சைக்கேட்டு மயங்காதவர்கள் இல்லை. நானும் அவரது பேச்சைக் கேட்டுமயங்கியவன்தான்.

இங்கே பேசிய புலவர் கீரன் தான் ம. பொ. சி.யின் மாணக்கர் என்று ம. பொ. சியை என்னிடமிருந்து அபகரிக்கப் பார்த்தார். நானும் அவர் மாணக்கர்தான். அவர் பொதுச்சொத்து. அவர் யாருக்கும் தனி உடைமைச்சொத்துஅல்ல.

### டாக்டர் பட்டம்

கீரன் பேசுகையில் ம. பொ. சிக்கு டாக்டர் பட்டம் வழங்க வேண்டும்; அடுத்த ஆண்டு அவரை டாக்டர் ம.பொ.சி.என்று அழைக்க வேண்டும் என்று தனதுஉள்ளக்கிடக்கையை வெளியிட்டார்.

இதையொட்டி பேசிய அமைச்சர்ஆர்.எம்.வீ.யும் இது குறித்து தன் கருத்துக்களைத்தெரிவித்தார்.

புலவர் கீரனுக்கு நான் சொல்லிக் கொள்வேன். இது உங்களதுஆசையல்ல. தமிழ்நாட்டு மக்களின் ஒட்டுமொத்த ஆசை இது தான். நாம் பேசுகின்ற பேச்சுக்கள் பல்கலைக்கழக மண்டபத்தில் எதிரொலிக்காதா?

மக்கள், அமைச்சரவையின் பிரதிநிதிகள்-மக்களை வழிநடத்திச் செல்கின்ற தலைவர் இந்த மேடையில் இருக்கும் போது-இதே மேடையில் தான் ம. பொ. சிக்கு டாக்டர் பட்டம் கொடுக்க வேண்டும் என்ற கருத்து நிலவுகிறது. இது பல்கலைக்கழகத்தின் கதவினைத் தட்டாதா?

பல்கலைக்கழகத்தின் கதவு நிச்சயம் திறக்கும் என்று நம்புவோம்.

ம. பொ. சி. நூறு புத்தகங்களை எழுதியிருக்கிறார். எனக்கே மூச்சு திணறுகிறது.

நானும் இரண்டாவது புத்தகம்எழுதியிருக்கிறேன் முதல்வர் அந்த நூலுக்கு அணிந்துரை தந்துள்ளார். அணிந்துரை அளித்த அவருக்கு நான் என் பணிந்துரையை தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது நூலை முதல்வர் புரட்சித் தலைவர் வெளியிடுவார். அப்போது ம. பொ.சி. இருந்து என்னைப் பாராட்ட வேண்டும்.

ம. பொ. சி. யின் குடும்பம் அன்னியோன்னிய குடும்பமாக இருக்கிறது. ம. பொ. சி. யும் அவரது துணைவியாரும் வாழ் வாங்கு வாழ வேண்டும் என்று வேண்டுகிறேன்.

இவ்வாறு நிதி அமைச்சர் நாஞ்சிலார் பேசினார்.

## கருணாநிதிக்கு ராசாராம் சூடு...

( 3-ம் பக்கத் தொடர்ச்சி )

யவன். பெரியாரின் ஒரே அந்தரங்க செயலாளனாக பர்மா-மலேசியா போன்ற நாடுகளில் சுற்றியவன். அறிஞர் அண்ணாவின் இறுதி மூச்சுவரை உடனிருந்து அவருக்குத் தொண்டு செய்தவன். எனக்கு நெஞ்சுக்கு நீதி போல் கற்பனையாக எழுதத் தெரியாது.

நான் கதை எதையும் எழுதியவனல்ல. நான்இறுதி வரை பதவி சுகம் கண்டேனும். யார்-யார் என்ன என்ன பதவி சுகம் கண்டார்கள் முழுவதும் சொல்லட்டுமா?

தி. மு. க. அமைச்சரவை கலைக்கப்பட்டவுடனேயே யார்யார் சென்னையிலிருந்தார்கள். தினசரி யார் பொது மக்களை சந்தித்தார்கள். கலைஞருக்கு எல்லாமே மறந்து போய் விட்டதா?

வேலை போன மறுநாள் கறுப்பு சிகப்புதுண்டுபோட்டு கொண்டுவெளியில்சென்று வந்தது நானா? மற்றவர்களா? கோட்டைக்குப் போனது நானா மற்றவர்களா? பதவியில்லாதபோது கழக வேலைகளுக்காக கோட்டைக்குப் போனது நானா? மற்றவர்களா? பொதுக்கூட்டங்கள் நடத்த முடியாமல் அவசரக் கால நிலையில் கல்யாண மண்டபங்களில் கூட்டம் நடத்த அதிகாரிகளிடம் கெஞ்சி அனுமதி வாங்கியது நானா மற்றவர்களா? அவசரக் காலம் பூராவும் எனது சொந்த குடும்ப வேலைகளைக்கூட விட்டு விட்டு, சென்னையில் உம்மோடு இருந்து பலரிடம் ஓடி காரியம் பார்த்தது நானா?மற்றவர்களா? புரட்சித்தலைவரிடம்நீர்சொல்லி தூது போனதுநானா?மற்றவர்களா? கழகத்தில் எனக்கு ஏதாவது சம்பளம் தந்தீர்களா? படி தந்தீர்களா?என்ன தந்தீர்? பதவிபோய் இருந்தசமயத்தில் சிறையிலே வாடுகிற கழகத் தொண்டர்களை விடுதலை செய்யவேண்டுமென அன்றைய பிரதமர் இந்திராகாந்தியிடம் டெல்லிக்கு தூதுபோய் பாடுபட்ட பிறகல்லவா உம்மால் துரத்தப்பட்டு வெளியே வந்தேன்.

நானே வெளியே போகும்போது இனி நமக்கென்ன வேலை என்று தானே மதிப்பிற்குரிய நாவலரும், செழியனும், மாதவனும், அரங்கண்ணலும், எச். எல். முருகேசனும், அண்ணன் காஞ்சியாரும், முல்லை வடிவேலு மாணவர் தலைவர் ஜனார்த்தனம் போன்றோரும் விலகி வெளியே வந்தார்கள்?

அன்றுகூட அடுத்தவீட்டு இலையை நோக்கி ஓடவில்லையே. மக்கள் தி, மு. க. வைத்தானே கண்டோம், பின்னர்தானே திராவிடர்இயக்கம் தனித் தனியாகப் பிரிந்து விடக்கூடாதே என்றல்லவா புரட்சித்தலைவர்ன் பெரும் படையில் சேர்ந்தோம்.

நான் என் அறிக்கையில் என்ன குறிப்பிட்டேன்? முரசொலி மாறனைத் தலைவராக்க அற்புதமாகஅஸ்திவாரம்போட்டுவிட்ட உண்மையைக் கழகத் தோழர்களுக்கு எடுத்துச் சொன்னேன். அதற்கு இவ்வளவு கோபம் வருவானேன்?

மறைந்த சிட்டிபாபுவின் மரணத்தை மறைத்து தனது குடும்ப புகழைப் பாடியதைக்கழகத்தொண்டர்களுக்குச் சுட்டி காட்டினேன். இது தவறா? நான் அடுத்த வீட்டு இலையைத் தேடி ஓடினேனும்.

### புதிய குபேரர்

வெள்ளித் தட்டும், தங்க முலாம் பூசிய வெள்ளி டம்ளரும், முத்துப் பச்சடியும், வைர மணி வறுவலும், கோமேதகத்தில் கூட்டும் வைத்து சாப்பிடும் வசதி உமக்கு தற்போது உண்டு என்பதை நான் அறிவேன். தமிழகத்தின் புதிய குபேரர் நீர்நான் மறுக்கவில்லை. தான் குபேரராக உள்ளதனாலேயே மற்றவர்கள் எல்லாம் அடுத்த இலையை நாடி ஓடுவதாக உமது கண்ணுக்கு காட்சியளிக்கிறது போலும்.

அடுத்த வீட்டு இலையை தேடி ஓடும்நிலை எங்களுக்கு இன்னும் வரவில்லை. கூழோ கஞ்சியோ வீட்டிலேயே தான் சாப்பிடுகிறோம்.

பதவிச் சுகம், பதவிச் சுகம் என்கிறார் கலைஞர். பதவியிலிருந்த போது என்ன லஞ்சம் வாங்கினேனா? அல்லது கேளிக்கைகளில் ஈடுபட்டேனா? நான் எண்ணுவதெல்லாம் திராவிடர் இயக்கம் காப்பாற்றப்படவேண்டும் என்பது தானே? அண்ணா கண்ட அந்தப் பேரியக்கம் அழிந்து விடக் கூடாது. என்ற நல்லெண்ணத்தின் அடிப்படையில் அல்லவா தொண்டர்களிடம் வேண்டினேன்,

எல்லாவற்றையும் மறைத்து அரசியலை தன்னுடைய குடும்பச் சொத்தாக்கத் துடிக்கிறார் கலைஞர். தந்தை பெரியார் அவர்களிடம் கருத்துமாறுபாடு கொண்டு அறிஞர் அண்ணா அவர்கள் தி. மு. க. வைத் துவக்கினார்கள். கோபாலபுரத்துக் கோமான் கணக்குப்படி அண்ணா அவர்களும் அடுத்த வீட்டு இலையைத் தேடி ஓடியவர்தானா?

சிந்தியுங்கள். இன்னமும் வேண்டுகிறேன். உங்களுக்காக நெடுங்காலமாக உழைத்தவன் என்கிற முறையில்வேண்டுகிறேன். தயவுசெய்து சிந்தியுங்கள்.

இவ்வாறு ராசாராம் கூறியுள்ளார்.

## தமிழக அரசு ஒப்பந்த அறிவிப்பு

எண் 9/79

தமிழக ஆளுநருக்காகவும், அவருடைய சார்பாகவும் கீழே கொடுக்கப்பட்டுள்ள வேலைக்கு மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்த நமூனாக்கள் கண்காணிப்புப் பொறியாளர் (நெஊப), எண் 2, சர்வஞான தெரு, திருநெல்வேலி-2 அவர்களால் 25-7-79ம் தேதி பகல் 3 மணி வரை (அலுவலக கடிகாரப்படி) கோரப்படுகின்றன. அவ்விதம் பெறப்பட்ட ஒப்பந்தங்கள் அன்றே 3-15 மணிக்கு திறக்கப்படும்.

1. வேலையின் பெயர் : தூத்துக்குடி புறச்சாலையில் செ. 6655 மீட்டரில் உள்ள மேம்பாலத்திற்கு வடக்கு பக்க அணுகு சாலை அமைத்தல் (தார் தளமிடல் தவிர)
   ஒப்பந்த மதிப்பு, ரூ. 4,38,500
   அழைப்பு எண் : 1
   முன் வைப்புத் தொகை: ரூ, 10,963
   ஒப்பந்த நமூனா விலை: ரூ. 52.00 விற்பனை வரி உட்பட
   ஒப்பந்தக்காரர் தகுதி ரூ. 5 லட்சமும் அதற்கு மேலும்
   ஒப்பந்த நமூனா கிடைக்குமிடம்:கோட்டப்பொறியாளர் (நெ) தூத்துக்குடி
2. மேற்படி புறச்சாலையில் தெற்கு பக்க அணுகு சாலையமைத்தல் (தார் தளமிடல் தவிர)
   ஒப்பந்த மதிப்பு: ரூ. 4,77,400
   அழைப்பு எண் 1
   முன் வைப்புத் தொகை: ரூ. 11.935
   ஒப்பந்த நமூனா. விலை: ரூ. 52.00 விற்பனை வரி உட்பட
   ஒப்பந்தக்காரர் தகுதி: ரூ. 5 லட்சமும் அதற்கு மேலும்
   ஒப்பந்த நமூனா கிடைக்குமிடம்: கோட்டப் பொறியாளர் (நெ) தூத்துக்குடி

ஒப்பந்த நமூனாக்களும், மற்றைய விபரங்களும் கோட்டப் பொறியாளர் (நெ. ஊ ப) தூத்துக்குடி அவர்கள் அலுவலகத்திலிருந்து வேலை நாட்களில் 11-7-79 தேதி முதல் 24-7-79 தேதி முடிய ஒப்பந்த நமூனாவுக்குரிய தொகையை செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம். இத்தொகை எக்காரணம் கொண்டும் திருப்பி தரப்படமாட்டாது. முன்வைப்பு, பிணைவைப்புத் தொகைகளுக்கு பாங்க் கியாரண்டிகள் கண்டிப்பாக ஒத்துக்கொள்ளப்படமாட்டாது.

எஸ். கிருஷ்ண விஜயன்,
கண்காணிப்பு பொறியாளர் (நெ ஊ ப),
திருநெல்வேலி-2

DIPR / 19070 / 79 / maa

## இந்தியாவின் மற்ற மாநிலங்களில் அச்சமும், அதிர்ச்சியும்

### தரத்தக்க சூழ்நிலையை வளர விடாதீர்

### மத்திய அரசுக்கு

# நாஞ்சிலார் வேண்டுகோள்

**சென்னை, ஜூன் 27-இந்தியாவின் மற்ற மாநிலங்களில் அச்சமும், அதிர்ச்சியும் தரத்தக்க சூழ்நிலையை வளர விடாதீர்கள் என்று மத்திய அரசுக்கு தமிழக நிதியமைச்சர் நாஞ்சிலார் வேண்டுகோள் விடுத்தார்.**

ம. பொ. சி. பிறந்த நாள் விழாவில் நிதியமைச்சர் நாஞ்சிலார் பேசியதாவது:

இளைஞர் ம. பொ. சி. இன்றைக்கு 73-வது வயதைமுடித்துக்கொண்டு 74-வது வயதில் அடியெடுத்து வைக்கிறார்.

அவரது பிறந்த நாள் விழாவில் கலந்து கொள்ள வேண்டும் என்று அழைத்தபோது நான் மெத்த மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டேன்.

ஆனால் என் மனம் வேதனைப்படத்தக்க அளவுக்கு காலையில் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

அதைச் சொல்லுவதால் நண்பர் பகவதி என்னை மன்னிக்கவேண்டும்.

காலையில் என்னுடன் தொடர்பு கொண்டுபேசிய பகவதி தவறு நடந்துவிட்டது. என்னைமன்னிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

ஏன் எதற்காக என்று நான் கேட்டேன்.

விழா சுவரொட்டி அச்சடிப்பதில் உங்கள் பெயர் மிகச்சின்னதாக அமைந்துவிட்டது, அதற்காக வருத்தப்படக்கூடாது என்று என்னைக் கேட்டுக்கொண்டார்.

அவரும் நானும் ஒரே மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள். என்னை நன்றாக அறிந்து வைத்திருப்பார் என்றுநினைத்துஇருந்தேன்.

### சுவரொட்டி ஆசை கொண்டோர்

போஸ்டர்களில் கொட்டை எழுத்துக்களில் பெயரைப் போடுவதால் ஒரு தனிச்சிறப்பு வரும் என்ற நம்பிக்கை உள்ளவன் அல்ல நான்.

அந்த ஆசைக்கு ஆட்படும் சிலர் உண்டு. சுவரொட்டி ஆள் உயரம் இருக்க வேண்டும். ஒவ்வொரு எழுத்தும் மிகப் பெரிய கொட்டை எழுத்துக்களில் இருக்க வேண்டும். இன்ன இன்ன வண்ணங்களில் அச்சடித்து இப்படி வெளியிட வேண்டும் என்ற ஆசை சிலருக்கு உண்டு.

அச்சிட்ட பிறகும் தன்னிடம் வந்து காண்பித்த பிறகுதான்சுவரொட்டியை ஒட்ட அனுமதி அளிப்பார்கள்.

அத்துடன் நிற்கமாட்டார்கள். தலையில் முண்டாசு கட்டிக்கொண்டு இரவு நேரத்தில் எந்த எந்த இடத்தில் சுவரொட்டிகள் இருக்கின்றன என்று நான்கு ஐந்து பேருடன் சென்று பார்ப்பார்கள். இப்படிப்பட்ட சிலர் இன்றைய தினம் தமிழகத்தில் இல்லாமல் இல்லை.

### இளைஞர் ம.பொ.சி.

என்னைப்பொறுத்தவரையில் நான் இவற்றையெல்லாம் கவனிப்பது கிடையாது. பகவதி என்னைக் கேட்டது கூட என்னை வருத்தி விட்டது.

சுவரொட்டியில் பெயரே போடாமல் இருந்தாலும் இந்த விழாவில் கலந்து கொள்ள நான் கடமைப்பட்டவன்.

ம.பொ.சியை இங்கே பாராட்டினர்கள். 74 வயதானம.பொ.சி.வீட்டிற்கு செல்லும்போது தனக்கு 64 வயதுதான் ஆகிறது என்று நினைக்கும் வகையில் வாழ்த்துக்கள் மன நிறைவோடு இருந்தன.

புலவர் கீரன் கம்பீரத்துடன் பேசினர். தமிழரசு கழக நண்பர்களும் உணர்ச்சியாகப் பேசினர்கள்.

ம. பொ. சி. 100-வது புத்தகத்தை தீட்டியிருக்கிறார். அதை முதல்வர் புரட்சித்தலைவர் வெளியிடும் வாய்ப்பை பெற்றுள்ளார்.

### நெருங்கி பழகியவன்

ம.பொ.சியை எனக்கு நீண்ட நெடுங்காலம் தெரியும்என்பதைவிட அவருடன் 10 ஆண்டு காலம் நான் மிக நெருங்கி பழகியவன் என்பதைச் சொல்லிக்கொள்கிறேன்.

அவரது சிலநல்ல குணநலன்களை அறிந்தவன்நான் இங்கே ஒருசிலஉணர்வுகளை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

''சமீபத்தில் தேர்தல்பிரச்சாரம் செய்தபோது அரசியல் பேசும் போது ''நாளைக்கு கருணாநிதி பிறந்த நாள். இந்த திருவாரூரில் இருந்து கொண்டே அவருக்கு நான் என் பிறந்த நாள் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்றேன்.

### அற்ப மகிழ்ச்சி

''அந்தக் கட்சிக்கு நான் வருகிற நாள் நெருங்குகிறது'' என்று சொல்லி அப்துல்சமது மகிழ்ந்தாராம்!

இத்தனைநாள் பழகிய என்னைஅப்துல்சமதுபுரிந்து கொண்டது அவ்வளவுதான். என்னைப்பற்றி அவருக்குத் தெரியும். இப்படிச் சொல்லும்போது கருணாநிதியே கூட தனக்குள் உள்ளூர சிரித்துக்கொண்டிருப்பார் -என்பது எனக்குத்தெரியும்,

நட்பை சரியாக புரிந்து கொள்ளாதஅரசியல்வாதி அவர்.

என்னைப் பொறுத்தவரையில் நான் ஏற்றுக்கொண்ட தலைவருக்காக இடுகாடு செல்லவும் தயாராக இருக்கிறேன்.

அண்ணாவுக்கு பிறகு நான் ஏற்றுக் கொண்ட தலைவர் புரட்சித்தலைவர்.

அப்படி சுலபமாக என்னை எடை போட முயற்சிக்காதீர் கிடைக்கிற இடத்தில் எல்லாம் மேய்கிற புத்தி எனக்கில்லை.

ம. பொ. சி. விழாவில் பேசுவதால் இத்தகைய உணர்வுகள் ஏற்பட்டு நான் பேசுகிறேன்.

மேலவைத்தலைவராக இன்றைய தினம் சிலம்புச் செல்வர் இருப்பது பற்றி அமைச்சர் வீரப்பன் சொன்னார்.

### தனி இடம் பெற்றவர்

அந்த ஆசனத்தில் ம. பொ. சி. தான் அமர வேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் ஆசைப்பட்டார். அப்படி நியமிக்கும்போது போட்டியில்லா சூழ்நிலை இருக்க வேண்டும் என்று விரும்பினர். அத்தனை பேரும் இதைஒத்துக கொண்டனர்.

ம.பொ.சி எழுதிய ஆயிரம் பக்கங்கள் கொண்ட புத்தகத்தை நான் படித்திருக்கிறேன்.

அவர் வறுமையை சுவைத்தவர். சாதாரண அச்சுக் கோர்ப்பவராக இருந்து நல்லசிந்தனையாளராக இலக்கியவாதியாக நல்ல தமிழராக தனியிடம் பெற்று விளங்குகிறார்.

அவரைப் பாராட்ட எனக்கு தகுதி இருக்கிறதா என்று எண்ணும் போது அவரைப் பாராட்டுவதன் மூலம் அந்ததகுதி வராதா என்று எண்ணுகிறேன். அவர் எழுதிய கருத்துக்கள் கண்ணீரை வரவைப்பதாகும்.

இப்போது இங்கே வருவதற்கு முன்பும் நான் அதைப்படித்தேன். அவர் சிறையிலிருந்து உடல்நலமின்றி வெளியே வந்தபோது ஸ்டிரெச்சரில் படுக்க வைத்து நான்கு பேர் தூக்கிச் செல்கின்றனர்.

அப்போது அரை நினைவில் இருந்தாலும் அங்கிருந்தவர்கள் பேசியபேச்சுக்கள் அவருக்கு தெளிவாகக் கேட்கின்றது.

### திருத்தணி மீட்டவர்

''பாவம் அநாதைப் பிணம்'' என்று சொன்னார்கள் இந்த இடத்தை நீங்கள் படித்தால் எவ்வளவு துடிப்பீர்கள் என்பது எனக்குத் தெரியும்.

அப்படிச் சொன்னவர்கள் இன்றைய தினம் உயிரோடு இன்னும் இருக்கலாம். அப்படி தூக்கிச் செல்லப்பட்டவர் தான் சிலம்புச் செல்வர்,

அவர் தனது போராட்டத்தை கூர்மை படுத்தியிருக்காவிட்டால் திருத்தணி கிடைத்திருக்காது; சென்னை கிடைத்திருக்காது. விரிந்த கன்னியாகுமரி மாவட்டம் இழக்கப்பட்டிருக்கும்.

அனைத்துப் போராட்டங்களுக்கும் தலைமை ஏற்று சிறந்த தேசியவாதியாக அவர் விளங்கினர். இத்தனைக்கும் அவர் பட்டப்படிப்பு படித்தவர் அல்லர்

### சிறையால் நன்மை

சிறையில் இருக்கும் போதுதான் புத்தகங்கள் படித்தார். பாண்டித்தியம் பெற்றார். அரசியலை-இலக்கியத்தைக் கற்றதோடு இசையையும் கற்றார்.

''தான் ஆஸ்பத்திரியில் இருந்த போது தனது

(2ம் பக்கம் பார்க்க)

### செந்தமிழ் தேசிய மாமணி

சென்னை, ஜூன் 27-சட்ட மேலவைத்தலைவர் சிலம்புச் செல்வர் ம.பொ.சியின் 74-வது பிறந்த நாள் விழா மயிலை ஏவி.எம்.ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடந்தது. தி.க.பகவதி வரவேற்றார். அமைச்சர் ஆர்.எம்.வீ. விழாவிற்கு தலைமை வகித்தார்.

முதல்வர் புரட்சித்தலைவர், நிதி அமைச்சர் நாஞ்சிலார், அமைச்சர் சுப்புலட்சுமி, கருப்பையா மூப்பனார், கருநாடக மேலவைத்தலைவர் சிவப்பா, புலவர் கீரன், எஸ். கே. பாலசுப்பிரமணியம், சேலம் ஆ. சின்னையன் ஆகியோர் பேசினர், ஆ. கோபாலகிருஷ்ணன் நன்றி கூறினர்.

முதல்வர் புரட்சித் தலைவர் சிலம்புச் செல்வருக்கு ஆளுயர மாலைஅணிவித்து பொன்னாடை போர்த்தினர். அவர் எழுதிய ''மகாத்மாவும் மதுவிலக்கும்'' ''தொல்காப்பியரில் இருந்து பாரதியார் வரை'' ''கம்பரிடம் யான் கற்ற அரசியல்'' என்ற 3 நூல்களையும் ம.பொ.சி.யைப்பற்றி இருவர் எழுதிய நூல்களையும் முதல்வர் புரட்சித் தலைவர் வெளியிட்டார். முன்னாள் நீதிபதி மகராஜன் அந்த நூல்களைப்பெற்றுக்கொண்டார்.

முதல்வர் புரட்சித் தலைவர் ம. பொ. சி எழுதிய ''மகாத்மாவும் மதுவிலக்கும்'' என்ற நூலைக் குறிப்பிட்டுப் பேசியபோது அவரது கண்களில் நீர் மல்கியது. தனது பேச்சினை ரத்தினச் சுருக்கமாக முடித்துக் கொண்டார்.

சிலம்புச் செல்வர் ஏற்

(8-ம் பத்தி பார்க்க)

### புலவர் கீரன்

புலவர் கீரன் பேசுகையில் கூறியதாவது:

''அரசியல் துறையில் மிகச் சிறந்த ஆன்மீகவாதி ம. பொ. சி. சிலருக்கு டாக்டர் பட்டம் ஏன் கொடுத்தோம் என்ற நிலை உள்ளது.

அந்த நிலையை நிவர்த்தி செய்யும் வகையில் இந்த ஆண்டு ம. பொ. சி. க்கு டாக்டர் பட்டம் அளிக்க வேண்டும். அமைச்சர் ஆர் எம். வீ இதற்கு முயற்சி எடுத்து இந்த ஆண்டே டாக்டர் பட்டம் கொடுக்க ஆவன செய்ய வேண்டும்'' என்றார்.

### சுப்புலட்சுமி

அமைச்சர்சுப்புலட்சுமி பேசுகையில்கூறியதாவது:

ஆளுங் கட்சிக்கும்எதிர்க் கட்சிக்குமிடையே விவாத மேடை நடக்கும்போது தனது இலக்கிய நடையால் சபையை ஈர்ப்பவர் சிலம்புச்செல்வர் ம.பொ.சி.

அவர் எழுதியநூறுபுத்தகங்களையும் தமிழ் சமுதாயத்தினர் ஒவ்வொருவரும் படிக்கவேண்டும்.

எங்களைப் போன்றவர்களுக்கு அவர் வழிகாட்டியாக இருந்து பல்லாண்டு வாழ வேண்டும்.

### மூப்பனார்

இந்திரா காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனார் பேசுகையில் ''தேசிய உணர்வோடு வாழ்கின்ற சிலம்புச் செல்வர் அந்த உணர்வோடு என்றும் வாழ்ந்து புகழ்பெற வேண்டும்'' என்றார்.

(1 ம்-பத்திதொடர்ச்சி) புரை கூறினர்.

தமிழ்நாடு நல்வழி நிலையத்தின் சார்பில் சிலம்புச் செல்வருக்கு ''செந்தமிழ் தேசியமாமணி'' என்ற பட்டத்தை முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினர்.

சட்ட அமைச்சர் நாராயணசாமி, மதுரை மேயர் முத்து, நாடாளுமன்ற உறுப்பினர் இரா.மோகனரங்கம் உள்பட திரளான அரசியல் பிரமுகர்கள் விழாவிற்குவந்திருந்தனர்.



## முதல்வர்கண்ணீர்உரை

(முதல் பக்கத் தொடர்ச்சி)

னைச் சட்டத்தின்மூலம் ஒழிக்க முயல்வதை எதிர்த்து வருகின்றன.

காந்திய பாரம்பரியக் கட்சிகள் இந்தவிஷயத்தில் தடம் புரளாமல் இருப்பது மகிழ்ச்சியைத் தருகிறது.

(இவ்வாறு படிக்கிறார்)

''இந்த விஷயத்தில் தடம் புரளாமல்'' என்பதை நீங்கள் அண்டர்லைன் செய்து கொள்ள வேண்டும்.

ஜனதா, இந்திரா காங்கிரஸ்கட்சிகள் மதுவிலக்கு அவசரச் சட்டத்தை ஆதரித்துள்ளன. இது வரவேற்கத்தக்கது ஆகும். காங்கிரசைச் சேர்ந்த பெரியவர் பக்தவத்சலனும் அவசரச் சட்டத்தை ஆதரித்து இருக்கிறார்.

(மீண்டும் தொடர்ந்து படிக்கிறார்)

இந்திரா காங்கிரஸ் தலைவர் திரு. கருப்பையா மூப்பனார் இந்த அவசரச் சட்டத்தை வரவேற்று இருக்கிறார். இதனை எதிர்க்கும் திமுக தலைவரைக் கண்டித்து இதில் கூடவா கலைஞர் கருணாநிதி அரசியல் காழ்ப்பைக் காட்டுவது என்று கேட்டு அறிக்கை வெளியிட்டு இருக்கிறார்

காந்திய பராம்பரிய கட்சிகள் மதுவிலக்கு அவசரச்சட்டதைஆதரித்தால் மட்டும் போதாது அதற்கு வலுவோடு தொடர்ந்து பிரசாரம் செய்யவும் முன்வர வேண்டும்.

மதுவிலக்கு அவசரச் சட்டம் கடுமையான விதிகளைக் கொண்டதாகஇருப்பதால்தான்அதனை எதிர்ப்பதாக திமுக காரணம் காட்டுகின்றது. இது ஏற்க முடியாதது ஆகும்.

அனைத்துஇந்தியஅண்ணா தி.மு.கழகத்திடம் ஜென்மப்பகையை காட்டுகிறது திமுக.

அது செய்யும் நல்லதை ஆதரிக்கவும் அது முன்வருவதில்லை. ஏதேனும் ஒரு போலிக்காரணம் சொல்லி எதிர்ப்புக்காட்டி வருகிறது.

அந்த வகையைச் சேர்ந்ததுதான் அவசரச்சட்டத்திற்கு அது காட்டும் எதிர்ப்பு.

அவசரச் சட்டம் மதுவிலக்குச் சட்டத்தை மீறுவோர்க்குத் தண்டனையை அதிகமாக்குகிறது. இது கடுமையானதுதான்.இதற்காகத்தான் தி. மு. க. அவசரச் சட்டத்தை எதிர்க்கிறது என்றால் அது ஆட்சிபுரிந்தபோது மது விலக்கு சட்டத்தை மீறுவோருக்கு எதிராக மிசா சட்டத்தையே பயன்படுத்திசமூக விரோதிகளை விசாரணை இன்றி சிறையில் அடைத்தது எதனால்? (என்று படிக்கிறார்)

பிறகு தொடர்ந்து பேசியதாவது:

இப்படி ம. பொ. சி. எழுதியதால் இவரை எப்படி தி. மு. க.வினர் பாராட்டுவார்கள்?

இவரும் தமிழர்தானு என்று கூட ஆத்திரப்படத் துவங்குவார்கள்.

மனதில்பட்டதைச்சொல்வது- நாட்டுக்கு எது நல்லது என்று மனதில் பட்டதை சொல்கிறார்.

இந்த அவசரச்சட்டம் கடுமையானது என்று சொல்லும் திமுக, அவர்கள் ஆட்சியில் மிசாவைப் பயன்படுத்தியதுஏன்என்று நான் கேட்டால் அது அரசியல்.

மதுவேண்டாம் என்று அனைவரையும் கேட்டுக் கொள்ள பிரச்சாரம் தேவையே என்றும்தமிழ்ப் பெரியார் ம. பொ. சி. எழுதி இருக்கிறார்.

இதனை நான் படித்தபோது சினிமாவில் வரும் Flash Back போல சில சம்பவங்கள் என் மனத்திரையில் வருகின்றன.

ம பொ சி குறிப்பிட்டு இருக்கும் அந்த சம்பவம் என் மனதில் அப்படியே நிழலாடுகின்றது.

(அந்தப் பகுதியைமுதல்வர் படிக்கிறார்)

குடிப்பழக்கத்தின் கொடுமையை நான் அறிவேன். நான் குடித்துக் கெட்டவன் அல்ல ஆண்டவன் அந்த இழிநிலைக்கு என்னைத் தள்ளவில்லை மதுவை உற்பத்தி செய்யும் குலத்தில் பிறந்ததால் மது அருந்தும் கொடிய பழக்கத்திற்கு ஆளாகிவிட்ட துர்ப்பாக்கியசாலியின் மகனாகப் பிறந்ததால்- குடிகாரக் கணவனிடம் அடிபட்டுவிம்மி பொருமி அலறி, அழுத நிலையில் என் தாயை பல நூறு சந்தர்ப்பங்களில் நான் பார்த்ததால்...

### மக்கள் கண்ணீர்

முதல்வர் புரட்சித்தலைவர் குரல் தழு தழுக்கிறது கண்ணீர்மல்குகிறதுதுக்கம் தாளாது படிப்பதுதடைப்படுகிறது. கண்களில் கண்ணீர் வழிகிறது - தொண்டையைச் சரி செய்து விம்மியபடி படிக்கிறார்.

குடிப்பழக்கத்திற்கு ஆளானவர்கள் நிறைந்த குடியிருப்பிலே பல்லாண்டு காலம்வாழ்ந்ததால் குடிப்பழக்கத்தின் கொடுமைகளை வேறுஎவரையும் விட நன்றாக அறிந்திருக்கிறேன்

இவ்வாறு குரல் தழுதழுக்க கண்ணீர் மல்க புரட்சித்தலைவர் படித்தபோது கூட்டத்தினர் அனைவரும் கண்கலங்கினர்.

பிறகு தன்னைச் சுதாரித்துக்கொண்டு விம்மலைக் கட்டுப்படுத்திக்கொண்டு முதல்வர் பேசினர்

இதுதான் ம.பொ.சி. அவர் நூறாண்டு வாழ வேண்டும் தமிழ்ப் பெருமக்களுக்கு தலைவராக வாழ வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கண்ணீர் விட்டபடி பேசிமுடித்தார்.

# தமிழகத்தின் புதிய குபேரர் கருணாநிதி: ராசாராம் சூடு

**சென்னை, ஜூன் 27- தமிழகத்தின் புதிய குபேரராக கருணாநிதி உள்ளதால் மற்றவர்கள் அடுத்த இலையை நாடி ஓடுவதாக அவருக்குத் தெரிகிறது. அடுத்த வீட்டு இலையைத் தேடி ஓடும் நிலை எங்களுக்கு இல்லை. கூழோ கஞ்சியோ வீட்டிலேயேதான் சாப்பிடுகிறோம் என்று கருணாநிதிக்கு ராசாராம் காட்டமாக பதிலளித்துள்ளார்.**



தமிழக அரசின் டெல்லி சிறப்புப் பிரதிநிதி க. ராசாராம் ஓர் அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:

''தஞ்சை தேர்தல் முடிவிற்குப் பிறகு தி.மு.க. தோழர்கள் தங்கள் எதிர்காலத்தைப் பற்றிசிந்திக்க வேண்டும் என்பதற்காக ஒரு வேண்டுகோளை பத்திரிகைவாயிலாக விடுத்திருந்தேன். எங்கே தி.மு.க' தோழர்கள் சிந்தித்து விடுவார்களோ எனப்பயந்து சீறிப் பாய்ந்திருக்கிறார் கலைஞர் கருணாநிதி.

கோபம் எந்த அளவிற்குப் போயிருக்கிறது. என்றால் நான் திராவிடர் இயக்கப் பாரம்பரியம் பற்றிப் பேசுகிறேனும். வீபிடணனும்-அனுமாராம் தனது தகுதிக்கு மீறி ஒன்றையும் கூறி என்னை இழிவுபடுத்த கலைஞர் முற்பட்டுள்ளார். அதாவது நான் பதவியை அனுபவித்து விட்டு இனி அடுத்த வீட்டு இலையை போய்ப்பார்ப்போம் என ஓடினேனும்.

நான் என்னைப் பற்றி இதுவரை எழுதிக் கொண்டதில்லை. ஆகஸ்டு மாதத்தில் நான் 54-வது வயதில் அடியெடுத்து வைக்கிறேன். திராவிடப் பாரம்பரியம்பற்றிபேசகலைஞரை விட ஆயிரம் மடங்கு தகுதியும் யோக்கியதையும் உள்ளவன் நான்.

1914-ம் ஆண்டு முதல் தந்தை பெரியாரை மிக நெருக்கமாக அறிந்தவர் என் தந்தை கஸ்தூரி. இருவரும் நண்பர்களும் கூட.

1937-ம் ஆண்டில் நடைபெற்ற நீதிக்கட்சி மாநாட்டிற்கு தலைமை தாங்கிய பொப்பிலி அரசரின் அந்தரங்கச் செயலாளராக வந்த அறிஞர் அண்ணா எங்கள் வீட்டில்தான் திருச்செங்கோட்டில் தங்கினர்கள், சர். ஏ.இராமசாமி, சர். ஆர்.கே.சண்முகம்செட்டியார், சர். ஏ. டி. பன்னீர்செல்வம் பி. டி. ராசன், ராஜசர் போன்ற நீதிக்கட்சித் தலைவர்களும் திராவிடன் ஆசிரியர் ஜனசங்கர கண்ணப்பா, நகரதூதன், ஆசிரியர் திருமலைச்சாமி சண்டே அப்சர்வர் ஆசிரியர் பாலசுப்பிரமணியம், 'ஜஸ்டிஸ்' ஆசிரியர் டி, ஏ, வி. நாதன், அண்ணன் அழகிரி, அறிஞர் அண்ணா, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், பொன்னம்பலனார் டபிள்யூ ஏ. சவுந்தரப்பாண்டியன் வி. வி. இராமசாமி குத்தூசி குருசாமி,எஸ்.வி.லிங்கம், சி பி சி போன்ற அத்தனை தலைவர்களும் என் குடும்பத்திற்கு மிகவும் வேண்டியவர்கள்.

மாணவப் பருவத்திலிருந்து இவர்கட்கெல்லாம், என்வீட்டில் தங்கியிருந்தபோது நான் தொண்டு செய்திருக்கிறேன்.

எட்டாவது வகுப்பிலிருந்து மாணவர் சங்க செயலாளராக தொடர்ந்து பள்ளியிலும், கல்லூரியிலும் பணியாற்றியிருக்கிறேன்.

சேலம் மாவட்ட தி. க. செயலாளர் பெரியாரின் சுயமரியாதை அறக்கட்டளை உறுப்பினர், ஆகிய பொறுப்புக்களில் இருந்தவன். 1952-ல் பெரியாரின் தலைமையில் திராவிடர் கழக பொது மாநில மாநாட்டைச் சேலத்தில் சிறப்பாக நடத்தி சரியான கணக்கைப் பெரியாரிடம் ஒப்படைத்தவன். அதற்காக தந்தை பெரியார் என்னைபாராட்டிஎழுதிஒரு விருந்தே அளித்தார்.

1954-ல்ஈரோட்டில் புத்தர் கொள்கை பிரச்சார மாநாட்டை அதன் செயலாளராக இருந்து நடத்தி

(2-ம் பக்கம் பார்க்க)

# அண்ணா



★ கழகத்தோழர்கள்தீயணைப்புபணியில்தீவிரம் ★ பாதிக்கப்பட்டமக்களுக்குஅமைச்சர்கள்ஆறுதல்

# தீ விபத்து: கழக அரசு அவசர உதவி

சென்னை, ஜூன் 27-ராயப்பேட்டை புதுப்பேட்டை கார்டனில் நேற்று மாலை பயங்கரதீவிபத்து ஏற்பட்டது தீயணைப்பு படையினரும் கழகத் தோழர்களும் தீயணைப்பு பணியில் ஈடுபட்டனர். இந்த விபத்தில் 500க்கும் மேற்பட்ட குடும்பங்கள் பாதிக்கப்பட்டன. ஏராளமானஅளவில் பொருட்சேதம் ஏற்பட்டது.

சென்னைஆயிரம்விளக்கு தொகுதியைச் சேர்ந்த ராயப்பேட்டை புதுப்பேட்டை கார்டனில் நேற்று (செவ்வாய்) மாலை பயங்கர தீ விபத்து ஏற்பட்டது.

இந்த தீ விபத்தினுல் பி. வி. கோவில் மூன்று தெருக்களில் உள்ள ஏராளமான குடிசைகள் எரிந்து சாம்பலாயின. எதிர்பாராத தீ விபத்திலிருந்து அப்பகுதி மக்கள் தப்பி ஓடினுர்கள்.

இந்த தீ விபத்தினுல் ஏறக்குறைய 170 குடிசைகள் எரிந்து சாம்பலாயின.

கடந்த 1967ம்ஆண்டில் இப்படி ஒரு தீ விபத்து இந்தப் பகுதியில் ஏற்பட்டது. இப்போது மீண்டும் இந்தப் பகுதியில் பெரிய தீ விபத்து ஏற்பட்டுள்ளது.

தீவிபத்திலிருந்து உயிர் தப்பிய மக்களால் தங்கள் உடைமைகளைப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை.

தீவிபத்து ஏற்பட்டவுடன் தீயணைப்பு நிலையத்திற்கு தகவல் கொடுக்கப்பட்டது. செய்தியறிந்த சிலநிமிடங்களில்தீயணைப்பு படையினர் விரைந்து வந்து மணிக்கணக்கில் போராடி தீயை அணைத்தனர். பதினெரு தீயணைப்பு வண்டிகளும் 50 பேரும் தீயணைப்புப் பணியில் ஈடுபட்டனர்.

## அமைச்சர்கள்

தீவிபத்துபற்றிய செய்தி கேட்டதும் அமைச்சர்கள் பி. டி. எஸ்., ராகவானந்தம், அரங்கநாயகம்' ராஜாமுகமது ஆகியோர் சம்பவம் நடந்த இடத்திற்கு விரைந்து வந்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆறுதல் கூறினர்.

தீவிபத்துஏற்பட்டபகுதியில்மின்சாரசப்ளை நிறுத்தப்பட்டு தீயினுல் பாதிக்கப்பட்ட குடிசை பகுதிக்கு ஃபோகஸ் விளக்குகள் பொருத்தப்பட்டன.

தீ விபத்து ஏற்பட்ட செய்தியை கேட்டதும் குடிசைமாற்று வாரியத்தலைவர் ராமபத்திரன் விரைந்து வந்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆறுதல் கூறினுர்,

சென்னைமாநகராட்சிதனி அதிகாரி ராமதாஸ், ஆணையாளர் ஆறுமுகம், தென் சென்னை துணை ஆணையாளர் குணசேகரன் ஆகியோர் விபத்து நடந்த இடத்திற்கு வந்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணஉதவிகளுக்கான ஏற்பாடு செய்தனர்.

தலைமை கழக செயலாளர் அப்துல் காதர், ஜேப்பியார், அடியார், பா. அங்கமுத்து. சி. வி. அன்புதம்பி, சி. ஆர். கோலப்பா தெய்வசிகாமணி, ஆகியோர் சென்று பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆறுதல் கூறி நிவாரணப்பணிகளில் ஈடுபட்டனர்.

இந்த விபத்தினுல் 170 குடிசைகளில் வாழ்ந்த 400க்கும் மேற்பட்ட குடும்பங்கள் பாதிக்கப்பட்டன. பாதிக்கப்பட்ட அனைவருக்கும் 2000க்கும் மேற்பட்ட உணவுப் பொட்டலங்கள் வழங்கப்பட்டன,

அமைச்சர்களிடம்பாதிக்கப்பட்ட மக்கள் கதறி அழுதனர். தங்களுக்கு ஏற்பட்ட பரிதாப நிலையையும் இழந்த இழப்புக்களையும்பற்றி கூறினுர்கள். தாய்மார்கள்கதறுவதைக் கண்டு ராகவானந்தம் கண் கலங்கினுர்.

அமைச்சர் பி. டி. எஸ். சிடம் கல்யாணி என்ற மூதாட்டி தன்னுடைய பேத்தியின் திருமணத்துக்காக அச்சிடப்பட்ட திருமண அழைப்பிதழ்களைகாட்டி ''ஐயோ, என் பேத்தி திருமணத்திற்கு வாங்கிய துணிமணிகள் எல்லாம் சாம்பலாகி விட்டனவே இனி நான் எப்படி திருமணத்துக்கு வேண்டியவைகளை வாங்குவேன்'' என்று கதறி அழுதார்.

இதைக்கண்டஅமைச்சர் பி. டி. எஸ், முதல்வர் புரட்சித்தலைவரிடம் கூறி திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதாகவும் ஞாயிறு அன்று திருமணம் நடக்கும் என்றும் உறுதியளித்தார்.

நீலாவதி என்ற பெண் தீ விபத்தின் கோரக்காட்சியைகண்டு மயக்கமடைந்தாள்.

அமைச்சர்களுடன் சென்னை மாவட்டஆட்சித் தலைவர் வந்திருந்தார். சென்னை மாநகராட்சியின் சார்பில் பாதிக்கப்பட்ட அனைவருக்கும் உடனடியாக உணவு குடிநீர் வசதி மற்ற ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

கழகத்தினர் த. சதானந்தம் 108வது வட்ட அமைப்பாளர் பிச்சைக்

(2ம் பக்கம் பார்க்க)

## நினைவு அஞ்சலி



மறைவு : 27-6-1976

எங்களது அருமைப் புதல்வி

**செல்வி பூங்கொடி**

நினைவு தினமான இன்று எங்களது இதய அஞ்சலியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தந்தை : எஸ். வி. மாரிமுத்து (73 - வது வட்டம்)
தாயார் : மீனுட்சி
சகோதரி : கலைச்செல்வி
சகோதரர்கள் : சீனிவாசன், கார்த்திகேயன், சரவணன்

# பஞ்சாலைகளில் வேலை நிறுத்தம் தொடர்வது அவசியமா?

# மறியல் போராட்டம் தேவையா?

25-5-1979ந் தேதி முதல் தமிழகப் பஞ்சாலைத் தொழிலாளர் சம்பள உயர்வு மற்றும் இதர கோரிக்கைகளுக்காக தொடர்ந்து வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு வருகிறுர்கள்.

வேலை நிறுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்பும் பின்பும், தொழிலாளர் இணை ஆணையாளர் முன்னிலையிலும் தொழிலாளர் நல அமைச்சர் முன்னிலையிலும், பின்பு நடந்த நேரடிப் பேச்சுவார்த்தைகளிலும் எந்த உடன்பாடும் ஏற்படவில்லை. இதற்கு தொழிற்சங்கங்களின் நியாயமற்ற கோரிக்கைகளும் பிடிவாதமான போக்கும்தான் காரணமாகும். பிரச்னையை ஆக்கபூர்வமான முறையில் அணுக தலைவர்கள் முன்வரவில்லை.

தொழில் அதிபர்கள் மற்ற பிரதான பஞ்சாலைக் கேந்திரங்களில் வழங்கி வரும் ஊதிய அளவை அனுசரித்து ஊதிய உயர்வு அளிக்க முன் வந்தும், தொழிற்சங்கத்தலைவர்கள் நாட்டு நடப்பில் இல்லாத வகையில் ஊதிய உயர்வு கேட்டார்கள். அவர்கள் கேட்கும் அளவு ஊதிய உயர்வு அளித்தால் தொழில் நலிந்துபோகும் என்று கூறியும் உண்மை நிலையைக் கருத்தில் கொள்ளாது, நியாயத்திற்குப் புறம்பான தங்கள் கோரிக்கைகளையே வலியுறுத்தி வருகிறுர்கள். தொழில் வளர்ச்சியையும் தொழிலாளர் நலத்தையும் கருத்தில் கொண்டு தொழிற்சங்கங்கள் செயல்படுவதாகத் தெரியவில்லை.

## பொதுமக்களே! தொழிலாளர்களே!! நீங்களே தீர்ப்பளியுங்கள்

வேலை நிறுத்தத்திற்கு முன்பாக தொழிற்சங்கங்கள் ஒரு தொழிலாளிக்கு மாதம் ஒன்றுக்கு ரூபாய் 500 முதல் 750 வரை ஊதிய உயர்வு கேட்டார்கள்.

பின்பு அதையே குறைத்து ரூ. 200 முதல் 250 வரை ஊதிய உயர்வு கேட்டார்கள்.

சில நாட்கள் பேச்சுவார்த்தைக்குப் பிறகு ரூ. 135'- (சகல சலுகைகள் உட்பட) ஊதிய உயர்வு கேட்டார்கள்.

இதிலிருந்தே இவர்கள் கோரிக்கைகள் எந்த நியாயமான அடிப்படையிலும் செய்யப்பட்டதல்ல என்பது வெளிப்படை.

தொழிற்சங்கங்கள் முடிவாக என்னதான் எதிர்பார்க்கிறுர்கள்?

## 21-6-79ந் தேதியிலும் 23-6-79ந் தேதியிலும் நேரடிப் பேச்சுவார்த்தைகளில் நடந்தது என்ன?

| தொழிற் சங்கங்கள் கோரியது | | தொழில் அதிபர்கள் அளிக்க முன்வந்தது |
|---|---|---|
| 1. அடிப்படை சம்பள உயர்வு | ரூ. 50 | ரூ. 40 |
| 2. பஞ்சப்படி 750 புள்ளிக்கு மேல் 35 பைசா (தற்போது அளிப்பது 30 பைசா) | ரூ. 40 | தற்போது வழங்கி வரும் நிரந்தர பஞ்சப்படி ரூ. 45-ம் 340 புள்ளிகளுக்கு மேல் புள்ளி ஒன்றுக்கு 30 பைசாவும் தொடர்ந்து அளிக்கிறோம். மேற்கொண்டு அதிகப்படுத்த எவ்வித முகாந்திரமும் இல்லை. |
| 3. வருடாந்திர சம்பள உயர்வு கோரியுள்ள புதிய அடிப்படை சம்பளத்தில் 3 சதவீதம். (இது வருடம் ஒன்றுக்கு ரூ. 10 ஊதிய உயர்வு அளிக்கும்) | | தற்போது வழங்கப்படும் 1 சதவீதம் தொடர்ந்து அளிக்கப்படும். |
| 4. வருடத்திற்கு 7 நாட்கள் சம்பளத்துடன் கூடிய காஷுவல் லீவு அளிக்கும் வகையில் | ரூ. 12 | தர இயலாது. |
| மொத்த ஊதிய உயர்வு | ரூ. 102 | |
| இதர சலுகைகளையும் சேர்த்தால் மாதம் ஒன்றுக்கு ரூ.135 ஊதிய உயர்வு அளிக்க வேண்டி வரும். | | ரூ. 40 ஊதிய உயர்வு அளித்தாலே மற்ற சலுகைகளுடன் மாதம் ஒன்றுக்கு ரூ.52கூடுதல் ஊதியம் கிடைக்கும். |

ஏற்கனவே தமிழக பஞ்சாலைத் தொழிலாளி பெறும் ஊதியம் எந்த விதத்திலும் குறைந்தது அல்ல. ஆயினும் தொழிலாளர் நலனையும் தொழில் வளர்ச்சியையும் கருத்தில் கொண்டு ரூ. 40 அடிப்படை சம்பள உயர்வு அளிக்க தொழில் அதிபர்கள் முன் வந்தனர். இந்த உயர்வினுல் தமிழக பஞ்சாலைத் தொழிலாளர் மற்ற எந்த மாநிலத்தையும் விட ரூ. 40 (மற்ற சலுகைகள் தவிர) அதிகமாக மாத ஊதியம் பெறுவர்.

## ஏற்கனவே இருக்கும் ஏராளமான லீவு போதாதா?

ஒரு தொழிலாளி வருடத்திற்கு எடுக்கக் கூடிய லீவின் அளவு:

| | |
|---|---|
| 1. தேசிய பண்டிகை மற்றும் விடுமுறை நாட்கள் | 9 |
| 2. வருடாந்திர ஓய்வு லீவு [குறைந்த பட்சம்] | 12 |
| 3. ஈ. எஸ். ஐ. லீவு | 91 |
| | 112 |

ஏற்கனவே 365 நாட்களில் வார விடுமுறை போக 200 நாட்கள்தான் வேலை செய்யும் நிலைமை இருக்கிறது. இதற்கு மேலும் சம்பளத்துடன் விடுமுறை கேட்பது நியாயமா?

## சமீபத்தில் மற்ற மாநிலங்களில் வழங்கிய சம்பள உயர்வு எவ்வளவு?

| | அடிப்படை சம்பள உயர்வு | பஞ்சப்படி உயர்வு | சமீபத்தில் கொடுத்த ஊதிய உயர்வுக்குப் பின் வழங்கும் பஞ்சப்படி | வருடாந்திர சம்பள உயர்வு |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| பம்பாய் | 45-00 | ஒன்றும் இல்லை | 379-10 | 6-00 |
| அகமதாபாத் | 46 02 | ஒன்றும் இல்லை | 371-96 | 6-50 |
| மத்தியபிரதேசம் | 45-00 | ஒன்றும் இல்லை | 355-00 | 6-00 |
| உத்திரபிரதேசம் | 45-00 | 4-20 | 250-96 | 6-00 |
| மே. வங்காளம் | 47-50 | 1-80 | 222-20 | 1-00 |

தமிழகத்தில் தற்போது அளிக்கப்படும் பஞ்சப்படி ரூ, 407-10. கடந்த நான்கு ஆண்டுகளாகவே தமிழகத் தொழிலாளிகள் பெறும் பஞ்சப்படி மற்ற மாநிலங்களைக் காட்டிலும் அதிகமாகவே இருந்திருக்கிறது. இதற்கு மேல் பஞ்சப்படி கோருவது நியாயமா?

விலைவாசி உயர உயர வாழ்க்கைப் புள்ளி உயர்கிறது. வாழ்க்கைப் புள்ளி உயர உயர பஞ்சப்படியும் புள்ளிக்கு 30 பைசா வீதம் தொடர்ந்து ஏறிக்கொண்டே போகிறது.

இப்படித்தான் சென்ற 5 ஆண்டுகளில் 428 புள்ளிகள் உயர்ந்ததால் பஞ்சப்படி ரூ 128 உயர்ந்திருக்கிறது. இப்படி விலைவாசி உயர்வு பஞ்சப்படி உயர்வால் ஈடு செய்யப்பட்டிருக்கும்போது, புள்ளி ஒன்றுக்கு இன்னும் அதிக பைசா பஞ்சப்படியாக கேட்பது எப்படி முறையாகும்?

ஏற்கனவே, பம்பாய், கல்கத்தா போன்ற மிகப்பெரிய நகரங்களை விட அதிக பஞ்சப்படியையே தமிழகத்தில் ஒரு குக்கிராமத்தில் உள்ள பஞ்சாலைத் தொழிலாளிக்குக் கூட வழங்குகிறோம் என்பதையும் உணர வேண்டும். மற்ற தொழில்களில் கிராமங்களில் வேலை செய்பவர்களின் மொத்த ஊதியம், பஞ்சாலைத் தொழிலாளியின் பஞ்சப்படி கூட இல்லை. அவர்கள் எவ்வாறு வாழ்க்கை நடத்துவார்கள்?

### தமிழகப் பஞ்சாலைகளில் தொழிலாளரின் உற்பத்தித் திறன் மற்ற மாநிலங்களை விட அதிகமா?

தொழிற்சங்கத் தலைவர்கள் தமிழகத் தொழிலாளியின் உற்பத்தித்திறன் மற்ற மாநிலங்களை விட 25 சதவீதம் அதிகம் என்றும் அதனுல் சம்பள உயர்வு அளிக்க வேண்டும் என்றும் வாதிக்கிறுர்கள்.

இவர்களின் கூற்று தவறு.

தமிழகப் பஞ்சாலைத் தொழிலாளியின் உற்பத்தித் திறன் மற்ற வடமாநிலங்களை விட 10 சதவீதம் குறைவே!

இதற்குக் காரணம் இங்குள்ள வேலைப்பளு மற்ற வடமாநிலங்களை விட 9 சதவீதம் குறைவாக இருப்பதே. கதிர் ஒன்றுக்கு ரூ. 200 முதல் 300 வரை செலவு செய்து நவீனப்படுத்தியதால் இயந்திரங்களின் உற்பத்தி தான் 25 சதவீதம் உயர்ந்திருக்கிறது. தொழிலாளியின் உழைப்பால் உயர்ந்த உற்பத்தி 4 சதவீதமே. இந்த சிறு உயர்வுக்குக் கூட, ஒவ்வொரு ஆலையிலும் ஒப்பந்தங்கள் மூலம் அதிக சம்பளம் வழங்கிவருகிறுர்கள்.

இவையெல்லாம் நாங்கள் கூறுவதல்ல-நடு நிலைமையான 'சித்ரா' ஆராய்ச்சிக் கழகத்தின் ஆராய்ச்சியின் முடிவுகளாகும்.

## முடிவு என்ன ?

தொழிலாளர் துறை இணை ஆணையாளர் சமரசப்பேச்சில் முடிவு ஏற்படவில்லை!
தொழிலாளர் நல அமைச்சர் சமரச முயற்சியும் பலன் தரவில்லை.
நேரடிப் பேச்சு வார்த்தைகளிலும் உடன்பாடு ஏற்படவில்லை.

இந்த நிலையில், பிரச்னையைத் தனி நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு விட்டுவிட்டு வேலையைத் துவங்குவது தொழிலாளருக்கும், தொழிலுக்கும், நாட்டுக்கும் நல்லதில்லையா?

இதைப் புறக்கணித்து போராட்டமும் மறியலும் ஏன்?

**பொதுமக்களே!**

**தொழிலாளர்களே!**

**சிந்தனை செய்யுங்கள்!**

**-தென் இந்திய பஞ்சாலைகள் சங்கம்,**
**கோவை**